## Bibiliographical Data


| | | |
|---|---|---|
| Title | : | TAMIZH GNAYIRU PAAVANAR |
| Author | : | PAAVALAR ELAKKIYAN |
| Subject | : | Literary |
| Language | : | Tamizh |
| Edition | : | First |
| Published | : | December, 2001 |
| Type Point | : | 12 Pt. |
| Paper Used | : | White Printing 10.5 kg. Double Crown |
| No. of Pages | : | 188 |
| No. of Copies | : | 1000 |
| Publisher | : | Thirumudi Pathippagam<br>38, Kizhakku Sannadhi Theru,<br>Villiyanur, Pondicherry - 605 110. |
| Price | : | **Rs. 50.** |

# தமிழ் ஞாயிறு

# பாவாணர்

பாவலர் **இலக்கியன்**

**திருமுடி பதிப்பகம்**

38, கிழக்குச் சன்னதி தெரு,

வில்லியனூர்,

புதுச்சேரி - 605 110.

# பொருளடக்கம்

# அணிந்துரை

முனைவர் பேராசிரியர்
இரா. இளவரசு அவர்கள்
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.

## தமிழ் ஞாயிறு

புதுவை ஒரு தமிழ்க்களம். பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் தோய்ந்த மரபுவழித் தமிழ்ப்புலவர்கள் வாழ்ந்தது. தம்முள் கருத்துப்போர் விளைத்த களம்! வேறுபாடுகளை எல்லோரும் விரும்பிப் படிக்கும் சிலேடை நயம் மிகுந்த அறிக்கைகள் வாயிலாய் அரங்கேற்றிக் கொள்வதுண்டு.

தமிழகத்திலிருந்து புதுவை சென்று தாங்கள் கலந்து கொண்ட கூட்டங்களில் ஏனோதானோவென்று பேசி எக்கச்சக்கமாக ‘வாங்கிக் கட்டிக் கொண்ட’ புலவர்கள் பலர்.

புதுவைப் புலமைவட்டம், புதுமை என்ற பெயரில் மரபை அறியாமல் மாறானவற்றைச் செய்பவர்களை எளிதில் விட்டுவிடாது. கண்ணின்று கண்ணறச் சொல்லும் வீறுமிக்க புலவர்கள் பலர் புதுவை பெற்ற பேறு.

கல்பபடத் தொழில்கள் கலக்கமுறும் வகையில் தனித்தமிழியக்க வினைப்பாடுகள் தழைத்தோங்கும் இடம் புதுவை. தனித்தமிழியக்க மாநாடுகள் நடத்தித் தனித் தமிழியக்க எழுத்தாளர் யார், எவர்? தனித்தமிழிலக்கிய வரலாறு முதலிய

வெளியீடுகள் புதுவையிலிருந்துதான் புறம் போந்தன. இன்றும் தனித்தமிழ் இதழ்கள் பல வெளியிடும் பெருமை புதுவைக்கு உண்டு.

எனினும் தனித்தமிழன்பர்கள் தனித்துத் தனித்துப் பல்வேறு குழுக்களாய்ப் பிரிவுண்டு கிடக்கின்றனர். பிளவுண்டு கிடப்பாரைப் பிணிக்கும் வகையில் எல்லோரிடமும் நல்லுறவு கொண்டு நற்றமிழ்ப்பணிகளுக்குத் துணை நின்று இயங்கி வருபவர் என் இனிய நண்பர் பாவலர் இலக்கியன். பன்னூலாசிரியரான இவர் 'தமிழ் வளம்' என்னும் இதழையும் நடத்தி வருகிறார்.

பாவாணர் பற்றி முன்னரே பாடல்கள் எழுதியுள்ள இவர், பாவாணரின் வரலாற்றை, பலதுறைப் பணிகளைப் பலரும் அறியும் வகையில் எளிய, இனிய நடையில் எழுதியுள்ள நூல் இது. இளந்தலைமுறையினர், மாணவர்கள் பயன்பெறும் நோக்கில் எழுதப் பெற்றுள்ளது.

நமக்காகப் பாடுபட்டவர்கள் பலர் கடலில் பெய்த மழையைப் போல நமக்கே தெரியாமல், தெரியப்படுத்தப்படாமல் மறைந்துபோன வரலாறு உண்டு. தக்கவர்களைப் போற்றாத, இனங் காணாத நாடு உலகில் முன்னேற முடியாது.

நாமெல்லாரும் உணவருந்தி நலமாய் உறங்கிய பொழுதுகளில் தாம் பசித்தும் கண்விழித்தும் நம்முன்னேற்றத்திற்காய் நாளெல்லாம் பாடுபட்டவர் தமக்குவமை இல்லாத தமிழ்அரிமா ஞா. தேவநேயப்பாவாணர்.

பாவாணரின் பன்முக ஆற்றல்களைப் பதினெட்டு இயல்களாகப் பகுத்துக் கொண்டு இந்நூல் பேசுகிறது. தனித்தமிழியக்கத்தை மக்கள் இயக்கமாக மாற்றி வளர்த்தவர்

பாவாணர். அவரைப் பற்றிய இந்நூல் முழுமையாகத் தனித்தமிழ் நடையில் இயற்றப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

அக்காலத்தில் தமிழ் பயின்றவர்கள் ஆசிரியப் பணியிற் சேர்வதற்குத் தகுதி வாய்ந்த புலவர் ஒருவரிடம் சான்றிதழ் பெறுவது மரபாக இருந்தது. பேராசிரியர் மனோன்மணியம் சுந்தரனாரிடம் மறைமலையடிகள் இவ்வாறு சான்றிதழ் பெற்றமையும் மறைமலையடிகளிடம் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் முதலிய பலர் சான்றிதழ் பெற்றமையும் வரலாற்றுப் பதிவுகள். அவ்வாறே இளைஞர் ஞா. தேவநேசன் சான்றிதழ் பெற்றுத் 'தேவநேசக் கவிவாணன்' ஆக ஆசிரியப் பணியிற் சேர்ந்தமை தெளிவாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

பாவாணர் தமது ஆராய்ச்சிக்குத் தேவையான நூல்களைத் தாம் வறுமையுற்றிருந்த நிலையிலும் தேடித்தேடி வாங்கிப் பயின்றார். 'இந்த நூல் தேவை', 'அந்த நூல் தேவை' என்று கழக ஆட்சியாளர் வ. சுப்பையா அவர்களுக்கு மடல்கள் எழுதிப் பெற்றுப் படித்தார். இளந்தலை முறையினர் கவனத்திற் கொள்ள வேண்டிய இச்செய்தியை நண்பர் இலக்கியன் நன்கு பதிவு செய்துள்ளார்.

பள்ளி என்னும் சொல்லின் பொருள்மூலம் காட்டிக் காலவோட்டத்தில் பொருள் திரிந்த வரலாற்றைப் பாவாணர் விளக்குவது அவ்வாறே நூலில் தரப்பட்டுள்ளது.

மொழியை ஒரு மரமாக உருவகப்படுத்தி அம்மரத்தில் வேர்கள், அடிப்பகுதி, கிளைகள் என்றிருப்பதைப் போல் மொழியிலும் வேர்ச்சொற்கள், அடிச் சொற்கள் அவற்றிலிருந்து கிளைத்தவை எனப் பலவாறு பகுத்து ஆராய்வார்கள்.

தமிழ்மொழியைப் பொறுத்தமட்டில் பொதுவாகச் சொல்லாராய்ச்சியிலும் சிறப்பாக வேர்ச் சொல்லாராய்ச்சியிலும்

பாவாணர்க்கு இணை பாவாணரே! தமிழ்மொழியின் வேர்கள் உலகமொழிகள் பலவற்றிலும் பரவியிருப்பதைப் பாவாணர் பல நூல்களில் விளக்கியுள்ளார்.

பன்மொழி அறிஞரான பாவாணரின் வேர்ச்சொல் ஆய்வுத்திறத்தை 'உல்' என்னும் ஒரு வேர் எங்ஙனம் விரிவடைந்து செல்கிறது என்பதைப் பாவாணர் சொற்களிலேயே நூலாசிரியர் சிறப்பாகக் காட்டியுள்ளார்.

பாவாணரின் இசைப்புலமை பலரும் அறியாதது. நால்வகை இசைக்கருவிகளில் ஒவ்வொருவகையிலும் ஏதேனும் ஒரு கருவியேனும் எனக்கு இசைக்கத் தெரியும் என்று பாவாணரே எழுதியுள்ளார்.

இறுதிக்காலம் வரை அவர் குழந்தைகளிடம் இசையோடு பாடி மகிழ்விக்கும் பழக்கம் உடையவராக இருந்தார். பலவகை மெட்டுகளில், பண்தாளக் குறிப்போடும் பல்லவி, அனு பல்லவி, சரண அமைப்பிலும் அவர் எழுதியுள்ள இசைப்பாடல்கள் ஏறத்தாழ ஐந்நூறு எனலாம்.

1942இல் அவர் எழுதிமுடித்த இருநூறுபக்க அளவிலான 'இசைத்தமிழ்ச் சரித்திரம்' என்னும் நூல் அச்சுவடிவம் பெறாமலே மறைந்து போய்விட்டது.

யாழ்நூல் தந்த விபுலானந்த அடிகளின் கருத்துகளை மறுத்துப் பாவாணர் எழுதிய கட்டுரைகள் அவரின் இசைப்புலமையை எல்லோர்க்கும் எளிதில் புலப்படுத்துவனவாகும்.

பலர்க்கும் தெரியாத பாவாணரின் இசைப்புலமையை இளந்தலைமுறையினரும் நன்கு தெரிந்துகொள்ளும் வகையில் 'இசைத்தமிழ் அறிஞர்' என்னும் ஓர் இயலையே அமைத்துச் செய்திகளை அளித்திருப்பது பாராட்டத்தக்கது.

பாவாணர் தமக்குச் சரியெனப்படுகின்ற கருத்தை எதிரில் இருப்பவர் என்ன நினைப்பார் என்று சற்றுந் தயங்காமல் எந்த நிலையிலும் எடுத்துச் சொல்லும் துணிவு மிக்கவர். தமிழர் அறியாமையிலும் அடிமைத்தனத்திலும் கிடந்துழல்வதை மாற்றித் தெளிவு பெற்றுக் கிளர்ந்தெழச் செய்ய வல்லவை பாவாணரின் படைப்புகள்.

**தாழ்வுணர்ச்சி நீங்கும் தகைமைக்கண் தங்கிற்றே**
**வாழ்வுணர்ச்சி காணும் வழி**

என்று அறிவுறுத்திய பாவாணரின் அஞ்சாமைப்பண்பு நூலின் பிற்பகுதியில் அழகாக விளக்கப்பட்டுள்ளது.

தமிழ்மொழியின் ஏட்டுவழக்கு, நாட்டுவழக்கு ஆகிய இருவகை வழக்காறுகளையும் நுணுகி நோக்கிக் கூர்ந்தறிந்தவர்களில் இணையற்றவர் பாவாணர்.

தமிழகத்தின் நீள அகல நெடும்பரப்பின் பல பகுதிகளில் பணியாற்றியவர். மக்கள் வழக்கை, பழமொழிகளை, விளையாட்டுகளை, திருமணம் முதலிய பண்பாட்டு மரபுகளைக் கூர்த்தறிந்த பாவாணர் அவைபற்றி நூல்கள் எழுதினார். அத்தொடர்பிலான ஏராளமான வழக்காறுகளை அங்கங்கே பதிவு செய்துள்ளார். அவற்றோடு வழக்கற்ற சொற்களையும் தாமே புதுவதாகப் புனைந்த சொற்களையும் வடமொழி, ஆங்கிலச் சொற்களுக்கு நேர் தமிழ்ச் சொற்களையும் பல இடங்களில் வழங்கியுள்ளார் பாவாணர்.

இந்நூலில் பல இடங்களில் அத்தகு சொற்களின் பட்டியல்கள் அளிக்கப்பட்டுள்ளன.

பாவாணரின் வரலாற்றை இளைய தலைமுறையினருக்கு எடுத்துரைக்கும் இந்நூலில் தனித்துக் குறிப்பிடத்தக்க சிறப்பாக நான் கருதுவது ஒன்று.

'நாடு இப்படி இருக்கிறதே' என்னும் நூலாசிரியரின் கவலையும், 'இப்படி இருக்கலாமா?' என்னும் வினாவும், 'இதனை மாற்றியமைக்க நாம் என்ன செய்ய வேண்டும்' என்னும் முடிவும் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

இளந் தலைமுறையினரை ஆற்றுப்படுத்தி எழுச்சி கொள்ளச் செய்யும் வகையில் அமைந்துள்ள நூலாசிரியரின் கவலைக்குரல் அவர் இந்நூலை எழுதியதன் நோக்கத்தை நிறைவு செய்யப் பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்.

இனிய நண்பர் பாவலர் இலக்கியனுக்கு என் வாழ்த்துகள்.

இரா. இளவரசு

# பாயிரம்

**அந்தாதிச் செல்வர்**
**புலவர் அரங்க. நடராசனார்**

'தமிழே! தமிழே!' என ஒலி முழங்கும்
அமிழ்தக் கடலின் அலைதரு புதுவையில்
உயிரே தமிழென உயிர்க்கும் புலவருள்
அயரா தொளிர்பவர் அன்பர் இலக்கியன்

தனித்தமிழ் காக்கும் பணிக்கென வந்தவர்
இனிக்கும் பகுத்தறி வேந்தல்! மணக்கும்
'தமிழ்வளம்' இதழால் தமிழ்ப்பயிர் விளைக்கும்
கருநிறக் கொண்டல்! வளப்பக் கழனி!

தமிழ்க்கழ கத்தைத் தாங்கும் கற்றூண்!
தமிழ்காவற் குழுவின் தகைசால் புரவலர்!
தமிழ்க்கவிஞர் மன்றின் இமிழ்க்கும் வலம்புரி!
தமிழன்பர்! தமிழ்ப்பணி அறக்கட் டளையின்
தனிப்பெருஞ் செயலர்! தன்மான ஏந்தல்!
தமிழ் வளர்ச்சிக் குழுவின் தமிழ்ப்போர் மறவர்!
சுந்தர சண்முக னார் அறக் கட்டளை
தந்து புரப்பவர் தம்மிற் றலைமகன்!
நடைப்பய ணத்தால் தமிழைப் பரப்ப
நடையாய் நடந்தும் நலியா உளத்தர்;
கடைப்பெயர்ப் பலகையில் கவின்தமிழ் வேண்டிக்

கடைகடை யாக ஏறி இறங்கியும்
களைப்பைக் கருதாக் கடமைக் குன்றம்!

பாட்டரங் கத்தின் தலைமைப் பாவலர்!
கேட்டாரை மயக்கும் காட்டுக் கருங்குயில்!
புதுவை யன்றித் தமிழக மெங்கும்
மதுத்தமிழ் உகுத்து மதிப்பை மணந்தவர்!

ஆய்வுக் கட்டுரை அளிக்கும் வித்தகர்!
கவிதை, கட்டுரை கணக்கில வாக
நிலைக்கும் நூல்களாய் விளைத்த பெருந்தகை!
மழலையர் வாயால் மகிழ்ந்து பாட
பழமுதிர் சுவைநூல் இழைத்த இளந்தலை!

பாவேந்தர் பெயரால் விருதுகள் நான்கினை
நால்வே றமைப்புகள் நல்கக் கொண்டவர்;
இலக்கியச் செம்மல், எழுச்சிப் பாவலர்,
இனமா னக்கவி மணிபாட் டறிஞர்,
என்பன வெல்லாம் இவர்க்குத் தந்த
விருதுகள் தம்மில் விதக்கத் தகுந்தவை.

பாரதி யாரின் பட்டயம் ஒன்றும்
பாரதி தாசன் பட்டயம் ஒன்றும்.
வீறுறப் பெற்றதைப் பேறெனக் கூறும்
கவிதைத் தென்றல்! கருத்துப் பெட்டகம்.

இனிய உலகம் என்னும் இவர்நூல்
புதுவை யரசால் புகழப் பெற்று
நிதியும் கிழியும் உதவிய தென்றால்
எழுத்து வலிமைக் கிதுவே போதும்.

மலைய நாட்டின் மாணவர் நூலில்
இலக்கியன் பாடல் நிலைத்துள தென்னின்

இவரின் பெருமை இயம்பல் ஒல்லுமோ?
தன்பால் பயிலும் அன்புறு சிறார்க்குப்
பிறந்தநாட் பரிசாய்ச் சிறந்த திருக்குறள்
ஒன்றைக் கொடுத்தே ஊக்கி விடும்இவர்
நன்றாற்ற லென்னும் நயன்மைக் கிலக்கணம்!

பாவாணர் என்றால் பனிபோல் உருகுவார்;
மறைமலை யாரிவர் மனச்சிறை தன்னில்;
தமிழுக் குழைக்கும் தறுகண ரனைவரும்
அமிழ்தம் இவர்க்கே; அவர்க்கிவர் அணுக்கர்.

அறுபத் தைந்தில் அடிவைத்து வந்த
இந்தியை எதிர்த்திங் கெழுந்த போரில்
முன்னணி வீரராய் வன்மையோ டெதிர்த்த
மன்னவர் இலக்கியன் மான்த் தமிழர்!

தமிழ்ப்பகை யாளர் தம்பகை யாளர்
தமிழ்ப்பற் றாளர் தம்பற் றாளர்
என்றே வாழும் இலக்கியன்
நன்றே வாழ்க நறுந்தமிழ் போன்றே!

*அன்பன்*
**அரங்க. நடராசன்**

பதிப்புரை

# பாவாணரை அறிவோம்! பைந்தமிழ் வளர்ப்போம்!

சூரியன் எல்லோருக்கும் தெரியும்.
கதிரவன் ஒரு சிலருக்குத் தெரியும்.
ஆதவன் என்பதை அறிந்தோருண்டு.
ஞாயிறு என்றால் ஒருசிலர் அறிவார்கள்.
ஞாயிறு ஏழுநாள் வாரத்தின் முதல்நாள்.
சூரியன் எனப்படும் ஞாயிறு மண்ணுலகின்
வாழ்வுக்கு உயிர் போன்றது.
தமிழ்மொழிக்கு உயிரும் உணர்வும் ஒளியும் தந்திட
அறிஞர் ஒருவர் வாழ்ந்தார். அதனால் அவர்
மொழிஞாயிறு எனப்போற்றப் பெற்றார்.
பிறமொழிக் கலப்பால் தமிழ்மொழி மாற்றமடைந்தது;
நல்ல தமிழ் மறைந்தது; பண்பாடும் மறைந்தது.
மொழிஞாயிறு
மொழி வளர்ச்சிக்கும் முழு வாழ்வையும் தந்தவர்;
மொழியின் அடித்தளத்தை ஆய்ந்தவர்.
மொழியின் வளத்தை முழுவதும் ஆய்ந்தவர்.
மொழியின் அழுக்குகளை முற்றும் களைந்தவர்.
மொழியின் ஆற்றலை அளந்து கூறியவர்.
பிறமொழிகளின் கலப்பைப் பெயர்த்தெறிந்தவர்.
தமிழ் தனித்துச் செயல்படும் என்பதை அறிந்தவர்.
தமிழ் தனித்துப் பேசப்படவேண்டும் என்று விரும்பியவர்.
பலமொழிகளை ஆராய்ந்தவர்,

பழமை வாய்ந்த தமிழ்மொழியை ஆராய்ந்தவர்.
வேர்ச்சொற்களின் ஆழங்கண்டுணர்ந்தவர்.
அதன் விழுதுகளின் நீளமும் உறுதியும் அறிந்தவர்.
மூத்த தமிழ்மொழி முன்போல் தனித்து
வாழ வேண்டும் என்று பாடுபட்டவர்.
நம் தாய்மொழியைத் தவறாக வளர்க்கக் கூடாது என்றவர்.
நம் தாய்மொழியை நன்றாகப் பயிலவேண்டும் என்றவர்.
நன்றாகப் பேசவேண்டும் என்றவர்.
நன்றாக எழுதவேண்டும் என்றவர்.
உலகமொழிகளில் முதல்மொழி தமிழே
என்று ஆராய்ந்து கூறியவர்.
உலகின் மூத்த குடிமக்கள் தமிழரே என்று கூறியவர்.
உலகின் முதல்நிலம் தமிழகமே என்று தெளிந்து கூறியவர்.
தமிழ் தமிழர் தமிழ்நாடு என்ற உணர்வோடு
வாழ்ந்த தமிழ்அறிஞர்.
தமிழ்அறிஞர்களில் தலைமையான, தகுதிமிக்க அறிஞர்.
உலகிற்கு ஒளி தருவது ஞாயிறு.
தமிழ்மொழிக்கு ஒளி தருபவர் மொழிஞாயிறு!
மொழிஞாயிறு என்று போற்றப் பெற்றவர் யார்?
தேவநேயப் பாவாணர்!
தேவநேயர் பெரும்புலவர்! பாவாணர்!
பாவேந்தர், புரட்சிப்பாவலர் பாரதிதாசன் அவர்களின்
போற்றுதலுக்குரிய மொழிஅறிஞர்.
தனித்தமிழ்த் தந்தையாகிய மறைமலை அடிகளாரின்
பாராட்டுதலைப் பெற்ற முழுஅறிஞர்.
மொழி ஆய்வில் மூழ்கித் தெளிந்த மூதறிஞர்
தமிழ்மொழியின் தகுதிச் சிறப்புகளைத்
தளரா உழைப்பினால் தயங்காமல் வெளிப்படுத்தியவர்.
தமக்கு என்று வாழாதவர், தமிழுக்காகவே வாழ்ந்தவர்.

தமிழர்கள் அவரைத் தாங்க முன்வரவில்லை;
தமிழ் அறிந்தோரும் அவருக்கு உதவவில்லை.
தமிழ்ப் பற்றாளர் என்றோரும் துணை செய்யவில்லை.
பணம் படைத்தோரும் அவரைக் கண்டுகொள்ளவில்லை.
பதவியில் இருந்தோரும் பரிவுகாட்டிப்
பயன் வளர்க்கவில்லை.
தனிமனிதர் என்ற நிலையிலும் அவருக்கு உதவவில்லை.
தமிழ்அறிஞர் என்ற நிலையிலும் அவருக்கு உதவவில்லை.
தமிழ்ப்பணியின் சிறப்பறிந்தும் போற்றவில்லை.
தமிழ்ஆய்வின் உயர்வு அறிந்தும் உதவவில்லை.

யார் யாருக்கோ பாராட்டுகள்; விழாக்கள்! விளம்பரங்கள்!
தன்னலக்காரர்கள் தலைநிமிர்ந்தார்கள்.
தன்னலமற்றுத் தமிழ்நலம் காக்க உழைத்தவரைத்
தமிழ்மக்கள் அடையாளங்கண்டு கொள்ளவில்லை!
அந்தோ தமிழ் மக்கள்! ஐயகோ தமிழ்நாடு!
அறியாமை! அறியாமை! அவலம் அவலம்!

நல்லதமிழ் விரும்பும் நல்ல தமிழர்கள்
அங்கும் இங்குமாய் ஒருசிலர் இருந்தனர்.
அவர்களின் உறவும் உள்ளன்பும்
ஓரளவு ஆறுதலாய் அமைந்தது அவருக்கு.

அவரது குறிக்கோள் என்ன? பேராவல் யாது?

தமிழ்மொழி தனித்தன்மையுடன் வழங்கப்பட வேண்டும்;
தமிழ்மக்களிடம் தமிழ்உணர்வு நன்கு பதிந்து
செழிக்க வேண்டும்.
தமிழ்மொழி தனது தனித் தகுதியுடன் வளரவேண்டும்.
தமிழ்மொழி உலகமொழிகளில் தலைமை ஏற்கும்
தகுதியுடையது. அந்நிலை வரவேண்டும்.
அதற்குரிய வகையில் தமிழ்மக்கள் வாழவேண்டும்;

செயல்பட வேண்டும்!
தமிழர்கள் நல்லதமிழில் எண்ணவேண்டும்;
எழுதவேண்டும்; உரையாடவேண்டும்!
இத்தனையும் பாவாணரின் மொத்தமான கொள்கைகள்.

செல்வ வெறி கொண்டோரும் அவரைச் சேரவில்லை.
பதவிவெறி கொண்டோரும் அவரைப் பயன்படுத்த.
ஏன்? ஏன்? தன்னலம்; தன்னலம்!
அதனால் தாய்மொழிபற்றி அக்கறை கொள்ளவில்லை.
ஆர்வம் கொள்ளவில்லை.
தமிழ்மொழி உணர்வு, தமிழ்இன உணர்வு,
தமிழ்நாட்டு உணர்வு என்பனபற்றி யெல்லாம்
கவலைப்படாதவர்கள் தமிழராய் வாழ்ந்தது
தமிழ்நாட்டு அவலம்!

தரம் மறந்த தமிழர்! தகுதி இழந்த தமிழர்!
அடிமைத்தமிழர்! அவலத் தமிழர்!

இன்றைய இளஞ்சிறார்கள், உண்மையான
தமிழ் அறிஞரை நன்கு அறிந்து கொள்ளவேண்டும்
அதற்கு உரியதே இந்தச் சிறிய புத்தகம்.

மொழி ஞாயிறு பாவாணரின் முனைப்பான உழைப்பை, முறையான ஆய்வை மாணவர்உலகம் மனத்தில் நன்கு பதித்துக்கொள்ளவேண்டும். அந்நோக்கத்துடன் இதனை எழுதியுள்ளார் புதுவை வாழ் பாவலர் இலக்கியன் அவர்கள். பாவாணர் வழியில் மொழி உணர்வுடன் வாழும் பாவலர், பல நூல்கள் எழுதிப் பண்பட்டவர். நமக்குப் பாடமாக வாழ்ந்தவர் ... ணர். அவரைப் பற்றி எழுதிய பாவலர் இலக்கியன் பாராட்டுக்குரியவர். அவர்கட்கு அன்பார்ந்த நன்றி. பாவாணர் வழியில் பயின்று வாழ்வோம்!

*- பதிப்பகத்தார்*

# என்னுரை

பாவாணர் பன்மொழிகள் அறிந்தவர்; அவர் ஒரு மொழி ஞாயிறு; அவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் ஆழ்ந்து அகன்ற நுண்ணிய பயிற்சியுடையவர். சொல்லாய்வுத் திறம்மிக்கவர். அவருடைய வேர்ச் சொல்லாய்வுகள் கற்போரை வியக்க வைப்பவை. அவருடைய பேச்சு மூச்சு செயல்கள் எல்லாமே தூய தனிச் செந்தமிழ்தான்.

தமிழ் மக்கள் அவருடைய நூல்களை நன்கு கற்கவேண்டும். அவருடைய உள்ளத்தை நன்கு புரிந்துகொள்ளவேண்டும். அவர் வழிநடக்க வேண்டும். அவருடைய கொள்கைகளை எங்கும் பரப்புதல் வேண்டும். அவருடைய எண்ணங்களைச் செயற்படுத்தவேண்டும்.

இவ்வாண்டு பாவாணர் நூற்றாண்டு. பாவாணர் நூற்றாண்டை எல்லாரும் சிறப்பாகக் கொண்டாடுதல் வேண்டும். பாவாணர் நூற்றாண்டே தமிழ் வளர்ச்சிப்பணிகளுக்கு அடித்தளம் அமைக்கும்; தமிழுக்கான உரிமைகளைப் பெறும்; தமிழைப் போற்றும்.

தனித்தமிழுளம் கொண்ட யானும் 'தமிழ் ஞாயிறு பாவாணர்' என்னும் இந்நூலை அவருடைய நூற்றாண்டில் வெளியிடுவதில்

பெருமகிழ்ச்சி கொள்ளுகின்றேன். எல்லாரும் வாங்கிப்படித்துப் பாவாணர் உள்ளத்தை அறிந்துகொண்டு பைந்தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபடுவீர்களாக! குறை பொறுத்து நிறை கொள்க! பல்துறையில் முத்திரை பதித்த பாவாணரின் வாழ்க்கை வரலாற்று நூல்களை வெளியிட்டு மகிழ்க! பாவாணரின் மொழியியல் ஆய்வுகளை ஆங்கிலத்திலும் வெளியிட்டு மேனாட்டு மொழியியல் வல்லுநர்களும் அறியச் செய்க!

இந்நூலுக்கு அணிந்துரை தந்த தமிழ்த்திரு முனைவர் இரா. இளவரசு அவர்களுக்கும், பாயிரம் வழங்கிய அந்தாதிச் செல்வர் அரங்க. நடராசனார்க்கும் நூலை அச்சிட்டுதவிய பதிப்புச்சுடர் வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களுக்கும் என் இனிய நன்றி உரியதாகுக!

10, முதல் தெரு,
சிவகங்கா நகர்,
புதுச்சேரி - 605 005.
தொ.பே. (0413) 201786

இலக்கியன்

# பாவாணர்

பாவாணர், பைந்தமிழ் வானம்;
பட்டொளி வீசி வலம் வரும் ஞாயிறு!

தமிழார்வத் தண்ணிய வெண்ணிலவு.
தனித்தமிழ் இயக்கக் கார்முகில்.
தமிழின மூச்சுக்காற்று; ஆய்வுப் பெருமழை!

தமிழர் வாழ்வின் தழங்கருவி;
தமிழுணர்வுப் பெருவெள்ளம்; புலமைப் பெருங்கடல்;
தமிழ்க்குமரி; தமிழர் வரலாற்றின் ஊற்றுக்கண்.
தமிழன் பிறந்தகம் காட்டிய தனித்தமிழறிஞர்.
எப்போதும் தூயதமிழே பேசும் சொல்லோடை!

இசைக்கலை அறிந்த இனிய தமிழ்க் குயில்
குனிந்து வாழ்ந்த தமிழறிஞர்களிடையே
நிமிர்ந்து வாழ்ந்து உயர்ந்த நீள் தென்னை!
அவருடைய நூல்கள் ஆய்வுக் களத்திற்கல்ல!

ஆட்சிக்களத்திற்கே! அருந்தமிழ் எதிர்ப்பாரின்
எதிர்ப்புகளைத் தூளாக்கு தற்கே!

யாரிடத்தும் பல்லிளிக்கவில்லை; பணியவில்லை;
எதற்காகவும் குனியவில்லை;

பாவாணர் தமிழ் விடுதலைக்கு வாழ்ந்தார்!
தமிழ் விடுதலைக்கே எண்ணினார் எழுதினார்!
பேசினார்! இயங்கினார்!

பாவாணர் பிழைக்கத் தெரியாதவராக இருக்கலாம். ஆனால்
பிழைப்புக்காகத் தமிழைப் பயன்படுத்தாத
தனி அரிமா அவர் ஒருவரே!
மூவேந்தர் மட்டும் பாவாணர் காலத்தே

இருந்திருந்தால் அவர்க்கு
முத்துக்குவியல் பரிசளித்திருப்பார்; அல்லது
பொன்தட்டிலே வயிரக்குவியலை வைத்திருப்பார்;
வளமனையும் வாழ்க்கை ஏந்துகளும்
பணவருவாயும் பாவாணர்க்கு இருந்திருந்தால்
படைநடத்தித் தடைஉடைத்துப்
பைந்தமிழை அரியணை ஏற்றியிருப்பார்.
வெறிகொண்டெழுந்திருப்பார்; வெற்றி கண்டிருப்பார்;
இற்றைத் தமிழர் - தமிழ்ப்பெருமை மறந்தார்;
அமிழ்தாம் தமிழைச் சிந்திவிட்டு
ஆங்கில மாவுருட்டைக்கு (ரொட்டி) அங்காந்து திரிகின்றார்.
தம் பெருமை பேசுகிறர்; தம் புகழ் நிறுவுகிறார்;
தமக்காகவே விழாக்கள் பல எடுக்கின்றார்.
ஏடுகள் நடத்துகின்றார்; எண்ணற்ற நூல்கள் வெளியிடுகின்றார்;
எதிலும் புதுமையில்லை; தமிழுக்கும் பயனில்லை;
களம் நோக்கவேண்டிய நேரத்திலா காரிகை கற்பது?
போர்முரசு கேட்டபின்னா புறப்பாட்டைத் திறப்பது?
காற்றால் தாக்குண்ட முரசின் ஒலி கேட்டே
களம் விரைந்த தமிழர் திறம் மறந்தார் தமிழர்!
களைகளுக்குத் தான் இங்கு வேலிகள் இடுகிறார்கள்;
போலிகளுக்குத்தான் இங்குப் பொன்மாலை சூட்டுகிறார்கள்.
பாவாணர் நூற்றாண்டான இவ்வாண்டைச்
சிறப்பாகக் கொண்டாட எழுக!
பாவாணர் கொள்கை மணிகளைப்
பைந்தமிழர் உள்ளமெலாம் தூவிடவே எழுக!
பாவாணர் கொள்கைப் பயிர் செழிக்க உழைத்திடுக!
தமிழ் தமிழ் என்று தமிழாக நின்ற பாவாணர் வளர்த்த
தமிழ் செழிக்கத் தாவி எழுக!

# 1. தாய்மொழி

நமது தாய்மொழி தமிழ். தமிழ், வளம் மிக்கது; தொன்மை மிக்கது; உலக மொழிக்கெல்லாம் முதன்மை வாய்ந்தது. நமது மொழியைக் காப்பது நமது கடமை; நாம் தமிழிலேயே பேசவேண்டும்; தமிழிலேயே எழுதவேண்டும். நமது தாய்மொழியில் நாம் எழுதிக்கொண்டும் பேசிக்கொண்டும் வந்தால்தான் நமது தாய்மொழி வளரும்.

தாய்மொழிக் கல்வியே மிகச்சிறந்ததென்று அறிஞர்கள் பலரும் அறுதியிட்டு உறுதியாகக் கூறியுள்ளார்கள். அவ்வாறு இருந்தும் தமிழர்கள் கேட்கவில்லை. நாம் நமது தாய்மொழியைத் தள்ளி வைக்கிறோம். பிறமொழி கற்பதிலேயே நம் வாணாளை வீணாக்கிக் கொண்டு வருகின்றோம்.

இயல்பாகவே அறிவை வளர்ப்பதும், ஆற்றலை வளர்ப்பதும், புதிய புதிய எண்ணங்களை நன்கு உருவாக்குவதும் நமது தாய்மொழியாகிய தமிழ்தான். இந்த உண்மையை மறந்துவிட்டு மாற்றார் மொழியான ஆங்கில வழியில் கல்வி கற்பது அறிவுடைமை ஆகாது. அறமும் அன்று.

மண்வளத்திற்கேற்றவாறுதான் பயிர்வளம் அமையும். எந்தெந்த மண்ணில் எந்தெந்தப் பயிர் வைக்கவேண்டுமோ அந்தந்த மண்ணில் அந்தந்தப் பயிர் வைக்கவேண்டும். தமிழர் மனமாகிய மண்ணில் தமிழ்ப்பயிர்தான் செழித்து வளரமுடியும்.

இன்றைய தமிழ் இளைஞர்களின் உள்ளத்தில் பிறமொழிப் பயிரிடுவதையே அரசும், பெற்றோரும், ஆசிரியப் பெருமக்களும் குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். இஃது மிகப்பெரிய குற்றமாகும்.

பிறமொழிக் கல்விப்பயிற்சி மாணவருலகைப் பின்னுக்குத் தள்ளிவிடும்.

தமிழ்ச் சிறார்க்குப் பிறமொழிக் கல்வி அளிப்பது வருங்காலத்தில் ஒரு பேரழிவை உருவாக்குவதற்கு வழிவகுக்கும்.

தமிழர்களாகிய நாம் தமிழ் வழியில் கல்வி பெறுவதே தக்கது. சாலச் சிறந்தது.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தமிழ் மிகவும் தூய்மை நிறைந்ததாக விளங்கியது.

ஆரியர் தமிழகத்தில் நுழைந்த பிறகு அவர்களுடைய மொழியான சமற்கிருதம் தமிழில் கலக்கத் தொடங்கியது. அதனால் தமிழின் எளிமையும், இனிமையும், அழகும் கெடத் தொடங்கியது.

இவ்வாறு தமிழுக்கு நேரும் கெடுதலைத் தடுக்க முன் வந்தவர்கள் தனித் தமிழ்த்தந்தை

மறைமலை அடிகளார்; மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர், பாவலரேறு பெருஞ்சித்திரனார் ஆகியோர் ஆவர்.

இவர்கள் மொழித்தூய்மைக்காகவே இயக்கம் கண்டவர்கள், இயக்கம் கண்டு இயங்கியவர்கள்; எண்ணற்ற போராட்டங்களை எதிர் நோக்கியவர்கள்; பெரும்புரட்சியைச் செய்தவர்கள்.

இவர்களின் தன்னலம் கருதாத பேருழைப்பால் தமிழ் தூய்மை பெற்றது. வளம்பெற்றது. வாழ்வு பெற்றது.

கஷ்டம், நஷ்டங்கள் ஓடிமறைந்தன. விவாஹம், சுபம், மூஹுர்த்தம் விலகி மறைந்தன. சந்தோஷம், சாம்ராஜ்யம், ஜலம், அசலம், அட்சரம், கலாசாலை, க்ஷேத்ரம், கடாட்சம் போன்ற ஆயிரக்கணக்கான வடமொழிச் சொற்கள் இருந்த இடம் தெரியாமல் துரத்தப்பெற்றன. எங்கோ ஓடி மறைந்தன.

அதே வேளையில் அந்நாள் வடமொழிக் கலப்பிற்கு ஈடாக இந்நாள் ஆங்கிலக் கலப்பும் அளவில்லாமல் போய்விட்டது. அதைத்தடுக்க இன்று யாருமே துணியவில்லை.

தமிழர்களாகிய நம்மிடத்தில் இன்று அளவு கடந்த ஆங்கிலப்பற்று தலைக்கேறி விட்டதால் அளவு கடந்த தமிழ்ச்சொற்களை இழந்து வருகின்றோம். இந்நிலை நீடிக்குமானால் தமிழ் மறைந்துபோகும்.

முன்னோர்களால் காத்து வளர்த்த தூயதமிழ் நம்மால் அழிந்துவிடக்கூடிய அவலநிலை ஏற்பட்டுள்ளது. இதைத் தமிழர்களாகிய நாம் தடுக்கவேண்டும்.

இன்று நம்முடைய பேச்சு வழக்கில் எண்ணற்ற ஆங்கிலச் சொற்கள் கலந்துவருகின்றன.

பலரும் ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசுவதே உயர்வு என்று கருதுகின்றனர். அழகென்று பலர் நினைக்கின்றனர்; பேசி வருகின்றனர்; எளிய தமிழ்ச் சொற்களை எல்லாம் மறந்தும் வருகின்றனர்;

தமிழர்க்குள்ள ஆங்கில வெறியினால் அருமையான நம் தமிழ்மொழி அழிந்துவிடுமோ? என்னும் பேரச்சத்தினால், உண்மைத் தமிழ்ப்பற்றுள்ள நெஞ்சங்கள் துடித்துக் கொண்டிருக்கின்றன.

தமிழ்மொழிக்கு இன்று எந்தவகையிலும் உரிமை இல்லை.

தமிழ் உரிமை பெற்ற மொழியாக வளர வேண்டுமானால், தமிழ் கட்டாயம் ஆட்சி மொழியாக வேண்டும்; அலுவல்கள் தமிழிலேயே நடைபெற வேண்டும்; தமிழ்வழிக்கல்வி வேண்டும்; தமிழில் வழிபாடு வேண்டும்.

நம்முடைய தமிழ் உரிமை பெற வேண்டுமானால் நாமெல்லாம் தேவநேயப்

பாவாணர் வழியில் கண்டிப்பாக நடந்தே ஆகவேண்டும். பாவாணர் வழியே தமிழை ஆட்சிமொழியாக்கும். தமிழ்வழிக் கல்வியைக் கொடுக்கும்; தமிழில் வழிபாட்டை உருவாக்கும்.

பாவாணர் நூல்களை நாம் ஆழ்ந்து படிக்கவேண்டும். அவருடைய நூல்களே தமிழ்ப் பகையை எதிர்க்கும் போர்வாள்கள்.

அவர் நூல்களே தமிழின் தொன்மையை உணர்த்தும்; தமிழின் வளத்தை அறிவிக்கும். புதிய புதிய சொல்லாக்கத்திற்கு வழிவகுக்கும்.

எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்! என்னும் கொள்கைக்கு அவர் நூல்களே உரமூட்டும்; ஊக்கமூட்டும்; வலிமையூட்டும்; துணிவூட்டும்; தமிழ் விடுதலைக்குத் தமிழரையெல்லாம் தூண்டும்.

பல்லாயிரம் ஆண்டுகளின் தமிழ் வரலாற்றையும், தமிழரின் வாழ்க்கை முறைகளையும் அவரது ஆய்வுரைகளே பறைசாற்றும்.

# 2. மொழிஞாயிறு

தேவநேயப் பாவாணரே மொழிஞாயிறாக விளங்கியவர். பாவாணருக்குப் பெற்றோர் இட்ட பெயர் 'தேவநேசன்' என்பதே!

அவர் இளமையிலேயே பாட்டெழுதும் (கவிதை) திறமை உள்ளவர்.

பண்டிதர் மாசிலாமணி என்பவர் பாவாணர் பாட்டெழுதும் திறத்தை நன்கறிந்தவர்.

அக்காலத்தில் தமிழாசிரியப் பணியில் சேர வேண்டுமென்றால், சிறந்த புலவர் ஒருவரிடத்தில் தகுதிச் சான்றிதழ் பெற்றுச் செல்லவேண்டும். அச்சான்றிதழைப் பண்டிதர் மாசிலாமணி அவர்களிடமே தேவநேயர் வாங்கிச் சென்றார்.

அவர் சான்றளிக்கும்போது, 'தேவநேசக் கவிவாணன்' என்றே அளித்தார். அப்பெயரையே தம் பெயராக ஏற்றுக்கொண்டார்.

பின்னாளில், தம் தூயதமிழ்க் கொள்கையால், வடசொற்களான 'நேசம்' 'கவி' என்பனவற்றை முறையே 'நேயம்', 'பா' என மாற்றித் "தேவநேயப் பாவாணர்" ஆனார்.

பாவாணரின் பெற்றோர் ஞானமுத்துத் தோக்கசு. பரிபூரணம் அம்மையார்.

இவர், திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சங்கர நயினார் கோவில் என்னும் ஊரில், கி.பி. 1933 சுறவம் (தை) 26ஆம் நாள் வெள்ளிக்கிழமை மாலை 6.00 மணிக்குப் (7.2.1902) பிறந்தார்.

பாவாணரின் பெற்றோர்க்குப் பிள்ளைகள் பத்துப்பேர் பிறந்தனர். அவர்களுள் ஆண்கள் நான்கு பேர்; பெண்கள் ஆறு பேர், பாவாணர் பத்தாவதாகப் பிறந்த பிள்ளையாவார்.

பாவாணரின் தந்தையாரான ஞானமுத்துத் தோக்கசு கல்வியிற்சிறந்தவர்; அறிவுக்கூர்மை உள்ளவர். ஆசிரியராகப் பணிபுரிந்தவர்.

பாவாணரின் தாயாரும் கல்விகற்ற பெண்மணியாவார். குடும்ப விளக்காய்த் திகழ்ந்தவர். ஆசிரியப்பணி புரிந்தவர். கணவருடன் கருத்தொருமித்து வாழ்ந்தவர்.

பாவாணர் பிறந்து அகவை ஐந்து ஆகும்போது 1906இல் அவருடைய தந்தையார் மறைந்துவிட்டார்; அடுத்து அன்னையாரும் மறைந்துவிட்டார்.

இளமையிலேயே பெற்றோரை இழந்த பர்வாணர் மிகப்பெருந்துயரத்தை அடைந்தார். அத்துயரம் தமது மூத்த தமக்கையாராலும், யங் துரைமகனாராலும் விலகியது.

தமக்கையார் இல்லம் வடார்க்காடு மாவட்டம் ஆம்பூரில் இருந்தது. அவ்வூரில் உள்ள மிசௌரி நல்லஞ்சல் உலுத்தரின் விடையூழிய (M.E.L.M) நடுநிலைப்பள்ளியில் எட்டாம் வகுப்புவரை பயின்றார்.

மேற்கொண்டு அங்கிருந்து கற்பதற்குரிய ஏந்துமில்லை; தமக்கையாரின் பொருள்நிலையும் அதற்கு இடந்தரவில்லை. அதனால் பாவாணர் பெரிதும் வருத்தமுற்றார்.

கல்வியில் ஆர்வமும் கற்பதில் ஊக்கமும் உடைய பாவாணர்க்கு 'யங்' துரைமகனார் வழங்கிய கடன் உதவி நடுக்கடலில் தவிப்பார்க்குக் கிட்டிய மரத்துண்டாக இருந்தது.

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த பாளையங்கோட்டையில் திருச்சவை விடையூழியக் கழக (c.m.s.) உயர்நிலைப்பள்ளியில், 9, 10, 11 - ஆகிய வகுப்புகளில் பயின்று வெற்றிபெற்றார்.

பிறகு 'யங்' துரைமகனார் முகவை மாவட்டம் சீயோன்மலையில் நடத்திவந்த உயர்நிலைப் பள்ளியில் ஆறாம் வகுப்பு ஆசிரியராகத் தம் 17ஆம் அகவையின்போது பணியாற்றத் தொடங்கினார். அப்போது அங்கு அவர்க்குக் கிட்டிய வருவாயில், முன்பு 'யங்' துரைமகனாரிடம் தாம் பெற்ற கடனை அடைத்தார்.

பாவாணர் பாளையங்கோட்டை உயர்நிலைப் பள்ளியில் படித்து வந்தபோது ஆங்கிலத்தில்

பெரிதும் ஈடுபாடுடையராக இருந்தார். சிறந்த ஆங்கிலப் பேச்சாளராகவும் ஆங்கில இலக்கிய மன்றச் செயலாளராகவும் இருந்தார். இங்கிலாந்தில் உள்ள எருதந்துறைப் பல்கலைக்கழகத்தில் (Oxford) பணியாற்றவும் விழைந்தார்.

அவருடைய வாழ்க்கைச் சூழல் அவரைத் தமிழின்பால் திருப்பிவிட்டது. அதுவே தூயதமிழ்ப் புரட்சிக்கு வலிவூட்டுவதாக அமைந்துவிட்டது. தமிழுக்கும், தமிழர்க்கும், தமிழ்நாட்டிற்கும் உற்ற பெரும்பேறாக விளங்கியது.

பாவாணர் வறுமைநிலையில் இருந்தாலும் வளமான அறிவுநிலையில் இருந்து வந்தார்.

பாவாணர் 1924ஆம் ஆண்டு மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதம் இறுதிநிலைத் தேர்வு மட்டும் எழுதி வெற்றி பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்கப்பண்டிதத் தேர்வு மிகக் கடினமானது. பாவாணர் ஒருவரே அவ்வாண்டில் இரண்டாவது வகுப்பில் தேர்ச்சி அடைந்துள்ளார்.

பிறகு 1926ஆம் ஆண்டு திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச்சங்கம் நடத்திய தனித்தமிழ்ப் புலவர் தேர்வு எழுதி வெற்றி பெற்றார். அதன்பிறகு சென்னைப் பல்கலைக்கழகம் நடத்திய வித்துவான் தேர்வெழுதி வெற்றி பெற்றார்.

மேலும், சென்னைப் பல்கலைக்கழகத்தின் கீ.க.இ.தே. (பி.ஓ.எல்) எனும் பட்டத்தைப் பெற்றார்.

கலைமுதல்வர் (M.A) எனும் பட்டத்தையும் பெற்றார். பிறகு இந்திமொழி பயின்று விசாரத்துப் பட்டமும் பெற்றார்.

க.மு. (எம்.ஏ.) பட்டம் பெறுவதற்குமுன் கீ.க.மு.தே. (M.O.L) பெறுவதற்கு 'திரவிடமரபு தோன்றிய இடம் குமரிநாடே' எனும் ஆய்வுக் கட்டுரை அளித்தார். பல்கலைக்கழகம் அதனை ஏற்க மறுத்துவிட்டது. அதனால் "இந்தியாவுக்குள் எனக்கு ஒரு தேர்வும் இல்லை" என்ற முடிவு செய்து மொழியாராய்ச்சியிலேயே ஈடுபடத் தொடங்கினார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அவர் பணியாற்றியபோது, 1957இல் வடநாட்டில் (டேராடூன்) நிகழ்ந்த கோடை மொழியியற்பயிற்சி வகுப்புக்கும் சென்று வந்தார்.

1957 திசம்பர் 27.28.29 நாள்களில் தில்லியில் நடைபெற்ற இந்தியக் கீழைக்கலை மாநாட்டிற்கும் சென்று வந்தார்.

பாவாணர் ஆழ்ந்த தமிழ்க்கல்வி பெற்றிருந்தார். ஆங்கிலம், இந்தி நன்கு அறிந்தவர். மேலும் சமற்கிருதம், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு, மராத்திஅரபு, ஈபுரு, சீனம், பிரஞ்சு, செருமன் ஆகிய மொழிகளும் அறிந்தவர்.

பாவாணர், இருபத்து மூன்று மொழிகளுக்கு மேலாக அறிந்தவர். அதனால், தமிழின் ஆழத்தையும் அகலத்தையும் எளிதாகக்

கண்டறிந்தார்; பிற மொழிகளிற் கலந்துள்ள எண்ணற்ற தமிழ்ச் சொற்களைக் கண்டுபிடித்துத் தமிழுலகிற்கு அளித்தார்.

பாவாணர் பணியாற்றிய இடங்கள்.

| | |
|---|---|
| 1919 - 21 | சீயோன் மலையில் உள்ள நடுநிலைப்பள்ளி ஆசிரியர். (2 ஆண்டுகள்) |
| 1922 | ஆம்பூர் கிறித்துவ உயர்பள்ளி. உதவித் தமிழாசிரியர். (2 ஆண்டுகள்) |
| 1924 | சென்னைத் திருவல்லிக்கேணிக் கெல்லற்று உயர்நிலைப்பள்ளி - உதவித் தமிழாசிரியர் (1 ஆண்டு) |
| | சென்னைக் கிறித்துவக்கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் (3 ஆண்டு) |
| | மன்னார்குடிப் பின்லேக் கல்லூரி. உயர்நிலைப் பள்ளியில் - தலைமைத் தமிழாசிரியர் (6 ஆண்டுகள்) |
| | திருச்சிப்புத்தூர் ஈபர் மேற்காணியார் உயர்நிலைப் பள்ளியில் - தலைமைத் தமிழாசிரியர் (9 ஆண்டுகள்) |
| | சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் - தலைமைத் தமிழாசிரியர் (1 ஆண்டு) |
| 1944 | சேலங்கல்லூரித் தமிழ்த்துறைத்தலைவர் (12 ஆண்டுகள்) |

1956 அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழிநூற்றுறை வாசகர். பேராசிரியர் (5 ஆண்டுகள்)

23-9-1961 அண்ணாமலை நகரை விட்டு வெளியேறுதல்.

*பாவாணர் 1919 முதல் 1961 வரை 42 ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். பணி முடிந்த போது அவர்க்கு அகவை - 59.*

# 3. துணிவுப் பயணம்

பாவாணர் எவ்வகைத் துயரத்திலும் அயர்ந்து சோர்ந்து விடாத மனஉறுதி கொண்டவர்; அவருடைய வாழ்க்கை என்னும் கடற்பயணத்தில் எத்தனை புயல்கள்? எத்தனை சூறைகள்? எத்தனை சுழல்கள்? எத்தனை எத்தனை இடி மின்னல்கள்? எத்தனை கவிழ்ப்புகள்? எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டு எழுகதிராய் எழுந்தவர் பாவாணர்.

பிறந்து வளர்ந்து ஐயாட்டைப் பருவத்திலேயே பெற்றோரை இழந்தது எவ்வளவு பெருந்துயரம்! தன் மகன் சான்றோன் எனக்கேட்டின்புறத் தாயில்லை; அவையத்து முந்தியிருக்கச் செய்யத் தந்தையில்லை; பெற்றோரை இழந்த பிள்ளைக்கு யார் என்ன அமைதி கூறுவது?

தாயும் தந்தையும் முன்னறிந்த தெய்வங்கள் ஆயிற்றே!

தாய் சொல்லும் தந்தை சொல்லும் உலகில் சிறந்த சொற்களாயிற்றே! தாய் தந்தையர் பிள்ளைகளின் மீது வைக்கும் அன்பிற்கு ஈடுண்டோ? எல்லை உண்டோ?

பிள்ளைகளின் முன்னேற்றத்தை முதன்மையாக விரும்புபவர்கள் இவ்வுலகில் தாய் தந்தையர் தாமே!

தாய் தந்தையரோடு இருந்து வளரும் பேறு பாவாணர்க்கில்லாதது இயற்கை செய்த மிகப்பெரிய ஊறாகும்.

ஈன்று வளர்த்த தாய்தந்தைக்கு
எவரே கைம்மா றியற்றிடுவார்.
ஆன்ற மதலை நூறுவய
தளவும் அடிமைத் திறம்பூண்டு
மூன்று புவனத் துள்ளபொருள்
முற்று மளித்து முறைமுறையே
ஏன்று வழிபா டியற்றிடி னும்
ஒருநாள் வளர்த்தற் கியையாதே.

- தனிப்பாடல்

என்ற பாடலால் தாய் தந்தையர் சிறப்பை நன்கறியலாம். அத்தகு சிறப்புள்ள தாய் தந்தையர் அரவணைப்பும் வளர்ப்பும் இல்லாமற்போனமை பாவாணர்க்கு ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும்.

மேனாட்டுக் கிறித்துவச் சமயத்தொண்டர் தோக்கசு என்பவரின் வளமனைக் காவலராகப் பணியாற்றியவர் முத்துசாமி என்பவர். அவர் மனைவி வள்ளியம்மாள் என்பவராவார். இவர்கள் இருவரையும் கிறித்துவச் சமயத்தில் சேர்த்துவிட்டார் (டோக்ஸ்) தோக்கசு.

இவர்கள் கிறித்துவச் சமயத்தில் சேர்ந்துவிட்டதால் உறவினர்களின் தொடர்புகளும் மிகவும் குறைந்துவிட்டன எனலாம்.

முத்துசாமி வள்ளியம்மாள் இணையருக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது. அது பிறந்த சில நாள்களுக்குள்ளாகவே அதன் பெற்றோரும் அடுத்தடுத்து மறைவெய்தினர் இஃது மிகப்பெருங் கொடுமையன்றோ!

தோக்கசு, அக்குழந்தைக்கு ஞானமுத்துத் தோக்கசு எனப்பெயரிட்டு வளர்த்தார். படிக்க வைத்தார். நன்கு படித்துத் தேர்ச்சியடைந்து ஆசிரியப் பணிக்குத் தகுதிபெற்றார்.

சங்கரன் கோயிலில் இருந்த தொடக்கப் பள்ளிக்கு ஆசிரியராகவும் அமர்ந்தார். ஞானமுத்துவின் உறவுப்பெண்ணான சொக்கம்மாள் என்பவரை மரியாள் என்று பெயர்சூட்டித் திருமணம் செய்வித்தார்.

அப்பெண்ணின் உறவினர்கள் ஈழத்தில் இருந்தமையால் ஞானமுத்துவோடு மரியாள் வாழ மனமின்றி ஈழத்திற்கே சென்றுவிட்டார். பிறகு, தோக்கசு, பரிபூரணம் என்பவரை ஞானமுத்துவுக்குத் திருமணம் செய்வித்தார். இவர்களுக்குப் பிள்ளைச் செல்வம் பெருகியது. பத்தாம் மகவாகப் பிறந்தவர் தாம் தமிழ்ஞாயிறான பாவாணர்.

பாவாணர் முன்னோரும், இறந்து விடுகின்றனர். பாவாணர் பெற்றோரும் இறந்து விடுகின்றனர். பாவாணர் குடும்பத்தில் தொடரும் துயரமாகவே உள்ளதென்பதை அறியலாம்.

பாவாணர் தமக்கையார் அரவணைப்பில் வளர்கின்றார்; கல்வி பெறுகின்றார்; யங் துரை மகனாரின் உதவித்தொகையால் உயர் கல்வியும் பெறுகின்றார்.

அத்துரை மகனாரின் பேருதவியால் ஆசிரியப்பணியும் பெற்று அவர் கடனையும் அடைக்கின்றார்.

'கல்வி ஒன்றே அழியாச் செல்வம்' என்பது பாவாணர் வாழ்க்கையில் உண்மையாகிவிட்டது. பாவாணரை உயர்த்தியது. அவர்கற்ற எளிய உயர்நிலைக் கல்வியே! ஆசிரியப்பணிக் கமர்ந்து படிப்படியே மேலும் கற்று உயர்ந்தார் பாவாணர்.

தமக்கையார் தம் விருப்பப்படியே பாவாணருக்கு 'எசுத்தேர்' (எஸ்தர்) என்னும் நல்லாளை மணமுடித்துவைத்தார். அன்பொடு வாழ்ந்த அவர்களுக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது. அம்மகவிற்கு 'மணவாளதாசன்' என்று பெயரிட்டு மகிழ்ந்தார்கள்.

அம்மகவு வளர்ந்து ஓராண்டு ஆகுமுன்னே பாவாணரின் மனைவி எசுத்தேர் என்பார் மறைவெய்திவிட்டார்; இப்பெருந்துயரை என்னென்று சொல்வது?

பாவாணர் துணையை இழந்தார்; அவரின் கைக்குழந்தை தாயை இழந்தது. பாவாணர் தவிப்பிற்கு அளவே இல்லை; கைக்குழந்தை மணவாள தாசனைப் பாவாணரின் இளைய தமையனார்க்கு வளர்ப்புக் குழந்தையாக முறைப்படி எழுதிக்கொடுத்துவிட்டார். இளைய தமையனார்க்குப் பிள்ளைப் பேறின்மையால் அவர் வளர்த்துக் கொள்ள எளிதாகிவிட்டது.

பாவாணர் தனிமையானார். துடுப்பிலாப் படகானார். பாவாணர் தமக்கையார்க்கும் குடும்பச் சுமையும் அதிகமாகவே இருந்தது.

பிறகு 1930இல், பாவாணர் தம் தமக்கையாரின் மகளான 'நேயமணி'யாரையே மணம் செய்து கொண்டார். பாவாணரின் இனிய இல்வாழ்க்கைப் பயனாக ஆண்மக்கள் ஐவர்; பெண்மகளார் ஒருவர் பிறந்தார்கள். அவர்கள் - நச்சினார்க்கினிய நம்பி. சிலுவையை வென்ற செல்வராயன். அருங்கலை வல்லான் அடியார்க்கு நல்லான்; மடந் தவிர்த்த மங்கையர்க்கரசி; மணிமன்றவாணன்; பைந்தமிழ் வளர்த்த பாண்டியன் ஆவர்.

ஆண்மக்களுள் நோய்வாய்ப்பட்டிருந்த குழந்தை பைந்தமிழ் வளர்த்த பாண்டியன் 24-12-39 அன்று இயற்கை எய்தினான். இவ்வருத்தம் பாவாணர்க்கு வாணாள் முழுமையாக இருந்தது.

தமக்கையாரின் கணவரும் கொடுமுடியில் இறந்துவிட்டார். (4-11-38) அதனால், தன்னைக் காத்த தமக்கையாரின் குடும்பத்தைக் காக்கும் பொறுப்பும் பாவாணர்க்கு ஏற்பட்டது.

மேலும் துயர்மேல் துயராகத் தம் தமக்கையாரின் இளைய மகளும், தம் துணைவியாரின் தங்கையுமாகிய 18 அகவையுள்ள நீலாம்பாள் என்பவரும் நோய்வாய்ப்பட்டு இறந்துபோகிறார்.

அவ்வேளை-தமக்கையின் மகன் விளையாடும் போது கைம்முறிந்து மருத்துவம் செய்ய வேண்டியிருந்தது -வருவாய் அற்ற குடும்பத்தில் அடுக்கடுக்காய் அல்லல்களைக் கண்டு வருவது ஆயிரம் இடிகள் தலையில் விழுந்தாற் போலல்லவா இருக்கும்.

பிள்ளைகளை வளர்ப்பதற்கும் பீடுறு கல்வி அளித்து அவர்களைப் பெரிய் மனிதர்களாக்குவதற்கும், பணியில் சேர்க்கவும் மணவினை நிகழ்த்தவும், பெரும்பொருட் செலவாகும். அந்நிலையில் பாவாணர் பெருந் துன்பப்பட்டிருப்பார் என்பது மிகையில்லை.

அவருக்கு ஏற்பட்ட சிக்கலான நிலையில், மொழிநூல் ஆய்வுகள், கட்டுரை எழுதல், நூலாக்கம் செய்தல், கூட்டங்களுக்குச் செல்லுதல், கொள்கைக்காக வாழ்தல் போன்ற எல்லாவற்றையும் விடாமல் செய்து வந்துள்ளார்.

இவ்வளவும் ஆற்ற வேண்டுமென்றால் எவ்வளவு நெஞ்சத் துணிவு தேவைப்படும் என்பதை யாவரும் அறியலாம். பாவாணர் 23.9.1961 வரை 42 ஆண்டுகள் பணிபுரிந்துள்ளார். அப்போது அவர்க்கு அகவை 59 ஆகும்.

> தாயோடு அறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
> சேயோடு தான்பெற்ற செல்வம்போம் - ஆய வாழ்வு
> உற்றார் உடன்போம் உடன்பிறப்பால் தோள்வலிபோம்
> பொற்றாலி யோடெவையும் போம்.
>
> ஔவை - தனிப்பாடல்.

என்னும் பாடல்படி பாவாணர்க்கு அவர் துணைவியார் போனபின் எல்லாமே போய்விட்டது. 27.10.1963 அன்று அவர் துணைவியார் காலமானார். மருத்துவமனைக்குச் செல்ல 10 ரூபாய் இன்மையால் தம் துணையை இழந்ததாகச் சொல்லுகிறார் பாவாணர்.. எவ்வளவு பெரிய துயரம்.

தம் மனைவியின் இறப்புக்குப் பின் அவர் உயிர் வாழ விரும்பவில்லை; உண்ண விரும்பவில்லை. அப்போது இரு பெரிய கடன்கள் இருந்தன. மணமாகாத இருமக்கட்கு மணம் செய்வித்தலும், வடமொழியினின்று தமிழை மீட்டலும் அவருடைய பெருங்கடன்களாகும்; கடமைகளாகும்.

மிகுதியும் அல்லல்பட்டார். அல்லற்பட்டு ஆற்றாது வடக்கிருந்து உயிர்விடவும் துணிந்தார் - தமிழுக்காகத் தம் உயிரை வைத்திருந்தார்.

தமிழர்க்கெதிரானவர்களும் தமிழுக்கெதிரானவர்களும் பாவாணர்க்கும் எதிரானவர்களே!

பாவாணரின் குமரிக்கண்டக் கொள்கையும் ஞால முதன்மொழிக் கொள்கையும், திராவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கு மூலமும் தமிழே என்னும் கொள்கையும் முன்னரே தமிழறிஞர்கள் சிலர் நிலை நாட்ட முயன்றுள்ளனர்.

பாவாணர் அத்துறையில் மிகவும் பரந்துபட்ட முறையில் ஆய்வுகள் நிகழ்த்தி உலகுக்கே தெளிவுபடுத்தினார்.

தமிழுலகம், தமிழை எவ்வாறு புறந்தள்ளி வாழ்கிறதோ அதைப்போலவே பாவாணர் கொள்கை அரசியற் துறையாலும், தமிழறிஞர் சிலராலும் புறந்தள்ளப்பட்டன.

பாவாணர் கேட்டை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்து கொண்ட கொள்கையை நிலைநாட்டினார்.

தமிழர்களே தமிழுக்கெதிராகச் செயற் பட்டனர். அதுவே பாவாணர்க்கு மிகப்பெரிய வருத்தமாயிற்று. அதனினும் உடனிருந்தவர்களும் ஒதுக்குகின்ற பிரிகின்ற நிலைகள் மேலும் அவர்க்கு வருத்தத்தையளித்தது.

கொள்கையால் கூடிச் சிறுசிறு கருத்து வேறுபாடுகளால் கலைந்துபோன வரலாறே தமிழர்

வரலாற்றின் பெரும்பகுதிப் பக்கங்களை அடைத்துக் கொள்ளும்.

6.10.1968இல் உருப்பெற்ற சில ஆண்டுகளிலேயே உலகத்தமிழ்க் கழகம் உருக்குலைந்தது. பாவாணரின் தெளிந்த கொள்கையும், தென்மொழியின் அரிமாநடையும், தனித்தமிழ் அன்பர்களின் தளரா உறுதியும் உலகத் தமிழ்க்கழகத்திற்கு வலிமை சேர்த்தும் வளம்பெறாமற் போனது பாவாணர்க்குப் பெரிய வீழ்ச்சியானது. அதுவே தமிழுக்கும் தமிழினத்திற்கும் வீழ்ச்சியானது.

1972இல் தனித்தமிழ் அன்பர்களால் முனைவர் மு. தமிழ்க் குடிமகனின் முயற்சியால் தமிழியக்கம் தொடங்கப்பட்டது. பேருணர்ச்சி தழைத்தது; இயக்கத்திற்கென ஏடுகளும் 'கைகாட்டி', 'தமிழியக்கம்' தொடங்கப்பெற்றன. பின்னர் வீழ்ந்தன.

பாவாணர் நூற்றாண்டை நோக்கித் 'தமிழியக்கமும்' தமிழியக்க ஏடும் மீண்டும் தளர்நடையிட்டுத் தற்போது வளர்ந்து வருகின்றன.

பாவாணர் An Epitome of The Lemurian Language and its Ramifications' என்னும் ஆங்கில நூலை வெளியிட முயன்றார். அஃது இயலாமற் போய்விட்டது. 52 பக்கத் தட்டச்சுப் படியாக அதன் சுருக்கம் அமைந்துவிட்டது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்டம் தென்மொழியின் பெருந்துணையாலும்,

தனித்தமிழ் அன்பர்களின் பெருங்கொடையாலும் வரவிருந்த நூல் பின்னர் அரசின் துணையால் வெளிவரும் முயற்சி நடந்தேறியது.

8.5.1974இல், அரசின் அகரமுதலித் திட்டத்தின் இயக்குநராக அமர்த்தப்பட்டார். அதன் பணிகள் தொடர்ந்தன. ஆனால் அதற்கான ஏந்துகள் சரிவரச் செய்யப்படாததால் பல இடர்ப்பாடுகளுக்கிடையே பாவாணர் பணி புரிய நேர்ந்தது. சில மடலங்கள் உருவாக்கினார். ஆனால், நூலாக அவரிருக்கும்போது வெளிவரவில்லை.

அவருடைய அடங்காத அகரமுதலி வெளிக்கொணரும் ஆசை, 'ஆசைமொழி'யோடு நின்றுவிட்டது பெருவருத்தத்திற்குரியதாகும்.

பாவாணர் அடைந்த துயரங்கள் ஒன்றா? இரண்டா? ஓராயிரம் என்று சொல்லலாம்.

பாவாணர் வாழ்க்கை முழுமையும் அவர்க்குத் துன்பப்புயல்தான் வீசியது.

தமிழகம் தக்க தமிழறிஞரை இழந்தது. அரியணை ஏற இருந்த தமிழும் தன்னாட்சி இழந்தது.

பல மொழிகள் பேசப்படும் பாரதத் திருநாட்டில், அந்தந்த மாநிலமொழிகள் வளர்வதற்கும், அகரமுதலிகளை அணியப்படுத்துதற்கும் கோடிக்கணக்கில் பணத்தைக் கொட்டி அளக்கிறது

அந்தந்த மாநில அரசுகள். பல்லாண்டுகள் பணிபுரிகிறார்கள். பன்னூறாயிரம் சொற்கள் திரட்டுகிறார்கள். தத்தம் மொழிகளை வளப்படுத்திக் கொள்கிறார்கள்.

தமிழ்நாட்டில் மட்டும் தமிழ்ப்பணிகளுக்குத் தடைகள்; தமிழரிடத்தில் அக்கறையின்மை; எல்லாம்.

தமிழ் நமது தாய்மொழி என்னும் நிலையிலாவது, தமிழைக்காக்கவும் வளர்க்கவும் நாம் முனைதல் வேண்டும்.

பாவாணர் தம் மொழி வளர்ச்சிக்காக பட்டபாடு அளவின்று.

உலகளவில் பாவாணரால் ஒரு பேரெழுச்சி ஏற்பட வேண்டிய சூழ்நிலையில், பாவாணர் மொழியியல் ஆய்வு நெறிகளுக்கு ஆக்கம் சேர்க்காமல் அவரை அலைக்கழித்தது தமிழர்க்குள்ள அறிவு முதிர்ச்சியின்மையையும் அறியாமையையும் காட்டுகின்றதெனலாம்.

பாவாணரின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிகள், முதன் மடலம் 2-3. தொகுதிகளும் இரண்டாவது மடலம் 1 உம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரால் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளன என்பது பெருமைக்குரியதாயினும் பாவாணர் இல்லாமல் வெளிவருவது தமிழன்பர்களுக்கு ஒரு குறையாகவே படுகின்றதென்பது உண்மையாகும்.

# 4. மொழி ஆய்வுப் பணிகள்

உலக முதன்மொழி தமிழே என்றும், திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழே தாய் என்றும், ஆரியத்திற்கு மூலமும் தமிழே என்றும் நிறுவியவர் பாவாணர்.

இதை நிறுவுவதற்கு அவர் பட்டபாடு அளவிடற்கரியது. அவர்தம் மொழி ஆய்வுப் பணிகளுக்கு அடிப்படையாக அமைந்தவை ஆழ்ந்த தமிழ்க்கல்வியும், பரந்துபட்ட நூற்பயிற்சியும், பன்மொழி அறிவும் ஆகும்.

தமிழை வடமொழியினின்றும், பிற மொழிகளின்றும் மீட்பதும், தமிழாட்சியை நிலைப்படுத்தலுமே பாவாணர் தம் பிறவிக் குறிக்கோள்களாகும்.

பாவாணர், தனித்தமிழ்த் தந்தை மறைமலை அடிகளாரால் பாராட்டுச் சான்றிதழ் பெற்றவர்.

**சொல்லாராய்ச்சித் துறையில் திரு. தேவநேயனார் ஒப்பற்ற தனித்தன்மை உடையவரென்றும் அவர்களுக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாவரென்றும் யாம் உண்மையாகவே கருதுகின்றோம். இது மறைமலையடிகளார் அளித்த சான்றில் ஒருபகுதி.**

**- 'மறைமலையடிகளார் நாட்குறிப்புக'ளில் பாவாணர்.**

7.5.1945 சேலம் நகராட்சிக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் திரு. தேவநேயப் பாவாணர் சில தமிழ்ச் சொற்களின் பிறப்புக் குறித்து ஆழமான உரையாற்றினார். அவர்தம் உரையில் பொதிந்திருந்த ஆழ்ந்த அறிவும் நகைச்சுவையும் கேட்டோரைப் பிணித்தன.

19.4.1946 பண்டிதர் தேவநேயப் பாவாணர் வந்தார். தம் தமிழ்ப் புலமைக்குச் சான்றிதழ் வழங்குமாறு வேண்டினார். கொடுக்க இணங்கினேன் தம்முடைய நூல்களான திரவிடத்தாய், கட்டுரை வரைவியல், சுட்டு விளக்கம் ஆகியன எனக்குக் கொடுத்தார்.

*பாவாணர் - இரா. இளங்குமரன். பக். 246*

பன்னூற்றுக்கணக்கான தூய தனிச் செந்தமிழ்ச் சொற்களையெல்லாம் வடசொற்களே எனக்காட்டிய தமிழறிஞர்களை எண்ணிப் பாவாணர் மிகவும் வருந்தினார்.

அதனால், மொழி ஆய்வுப் பணிகளில் மும்முரமாக இறங்கினார். அதற்கான பணிகளில் ஆழவே மூழ்கினார்.

உலக மொழிகள் பலவற்றில் வெளிவந்துள்ள அகர முதலி நூல்களைத் தேடிப்பிடித்து வாங்கினார். அல்லும் பகலும் கற்றார்; பல்லாயிரக்கணக்கான உருவாக்களைச் செலவு செய்தார்; தமக்குள்ள வறுமை நிலையைக்கூடக் கருதாமல் விலையுயர்ந்த பல நூல்களை வாங்கித்

தொகுத்தார். ஆய்வுகள் செய்தார்; தமிழர்கள் தலைநிமிர்ந்து நிற்பதற்கான வழிமுறைகளைக் காட்டினார்.

மறைமலையடிகளார்க்குப் பிறகு தமிழைத் தழைக்க வைக்கும் வல்லமை உடையவர் பாவாணர் ஒருவரே. முழுத்தகுதியும் அவர்க்கே உண்டு.

இயக்கமே அவர்; இயங்குபவரும் அவரே.

"அடிகட்குப்பின் அரும்பாடுபட்டுத் தமிழைக் காப்பது நான் ஒருவனே" என்று அழுத்தந் திருத்தமாகக் கூறியுள்ளார்.

பாவாணர் நல்ல நூல்கள் வாங்குவதில் பெருவிருப்புள்ளவர்.

மறைமலையடிகளாரும் பல்லாயிரக் கணக்கான நூல்களை வாங்கிச் சேர்த்துள்ளார். அவை இன்று தமிழறிஞர் பலர்க்கும் சிறந்த முறையில் பயன்படுகின்றன. பாவாணரும் மிக அரிய நூல்களையெல்லாம் வாங்கிச் சேர்த்துள்ளார். அவர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியருக்கு நூல்கள் வாங்கியருளுமாறு விடுத்த மடல்கள் மூலம் பல அகர முதலிகளைப் பற்றி அறிந்து கொள்ளலாம்.

பிரித்தானியக் கலைக்களஞ்சியம்
எருதந்துறை (oxford) ஆங்கிலப் பேரகரமுதலி
ஆரிய தரங்கிணி

An. Anglo - Saxom Dictionary
An Ety mological English Dictionary
An Icelandic - English Dictionary
தமிழ் நாட்டு மாவட்டத் திணைக் களஞ்சியங்கள்.
சென்னைப் பல்லைக்கழக அகர முதலி
கீற்று ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலி
(An Ety mological Dictionary of the English Language by Skeat)
வெபுசித்தர் வியனுலக அகர முதலி
(Webster Universal Dictionary)
பாம்பன் சுவாமிகளின் சேந்தன் செந்தமிழ். *(1906)*
கிற்றல் கன்னட அகரமுதலி
தெலுங்கு அகரமுதலி
மலையாள இலக்கணம், மலையாள அகரமுதலி.
Arabic English Vocabulary.
Chinese Self - taught & grammar
பிரஞ்சு இலக்கணம் - செருமணி இலக்கணம்
கிரையர்சன் இந்திய மொழியளவைக் கணக்கீடு.
An Advanced History of India *(நீலகண்ட சாத்திரி)*
India as known to Panini.

மன்பதை வரலாறு. (History of Mankind)
(62 நாட்டு அறிஞர்களால் 18 ஆண்டுகளாகத் தொகுக்கப்பட்டது.

7000 பக்கங்களில் 7 மொழிகளில்
யுனெஸ்கோ
துணையால் வெளிவந்தது.)

பாசுவொர்து - காம்பெல் அகரமுதலி.
கிரேக்க ஆங்கில அகரமுதலி.
கீழைத் திருப்பொத்தகத் தொடர்.
(Sacred Books of the East Series).
சிந்து ஆற்றங்கரை.
வேத நூல்கள்.
துளு அகரமுதலி. (சென்னைப்
பல்கலைக்கழகம்)
The Ramayana - A Lingustic Study
Gazetteer of India.

மேற்கண்ட அகரமுதலி நூல்கள் அல்லாமல், வேறுபல விலை உயர்ந்த பிறமொழி அகர முதலிகளும் பாவாணரிடத்தில் உண்டு.

மொழி நூல், மாந்த நூல், நிலநூல் ஆகிய பிரிவுகளில் உலக அளவில் வெளிவந்த பன்னூறு நூல்களைப் பாவாணர் பயின்றுள்ளார்.

பாவாணர் எண்ணற்ற நூல்கள் பயின்றது எதற்கென்றால் தமிழை மீட்கவும், தமிழனைத் தலைநிமிரச் செய்யவும், தமிழன் பிறந்தகம் குமரிக்கண்டம் என்பதை உலகுக்கு அறிவிக்கவுமே ஆகும்.

பாவாணர் ஓரிடத்தில் அமர்ந்து படித்துக்கொண்டும் எழுதிக்கொண்டும் இருந்தார். மூலை முடுக்கெல்லாம் ஓடியாடித் தம் கருத்துகளை உரைத்தார்; தமிழினத்தைத் தட்டி எழுப்பினார்.

பாவாணர் மொழி ஆய்வில் வல்லவர்; சொல்லாக்கச் செல்வர்; பலமணி நேரம் எண்ணக் கூடியவர்.

ஒரு சொல்லுக்குரிய, வேரை, பக்கவேரை, சல்லிவேரை அறிவதற்குப் பல திங்கள், சில ஆண்டுகள்கூட ஆகலாம். அந்த அளவுக்கு ஆழமாக எண்ணக்கூடியவர்; பல்வகை அகர முதலிகளைப் புரட்டக் கூடியவர்; மேனாட்டறிஞர்களின் மொழி ஆய்வுகளை நன்கு கற்றவர்.

மொழிநூல் ஆய்வு முறைகளைப் பின்பற்றித் தமிழில் அவரெழுதிய நூல்கள் மிகச்சிறந்தவை.

தமிழில், நிறைய வடசொற்களும் பிறமொழிச் சொற்களுமாக ஐம்பது விழுக்காடுகள் கலந்துள்ளன என்று தமிழறிஞர்களிற் சிலர் கூறுவர். தமிழறிஞர்களிற் சிலர், தமிழ்ச் சொற்களை வடசொற்களௌன மயங்கியும் கூறுவர்.

அவற்றுக்கெல்லாம் பாவாணருடைய மொழி ஆய்வுகள் மிகுந்த பயனளித்தன. வியப்பையும் அளித்தன.

பாவாணரிடம், எட்டு நிலைப்பேழைகளில் நூல்கள் இருந்தன. அவற்றுள் விலை உயர்ந்த அகர

முதலிகளும் இருந்தன. அவர்தம் வாழ்நாளில் ஐம்பதாண்டுகளுக்கு மேலாக மொழி ஆய்விற்காகவே வாழ்ந்துள்ளார். அரிய பல உண்மைகளை நம் தமிழ் உலகிற்கு அளித்துள்ளார்.

பாவாணரின் மொழி ஆய்வுப் பணியின் முழுவிளக்கம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியே ஆகும்; அவ்வகர முதலியை உருவாக்கத் தமிழக அரசு, (8.5.1974) ஞா. தேவவநேயப் பாவாணரை இயக்குநராகக் கொண்ட செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம் (Directorate of Tamil Etymological Dictionary Project) தமிழக அரசின் கல்வித் துறையின் தனித் துறையாகத் தோற்றுவிக்கப்பட்டது. பாவாணர் அதில் ஏழாண்டுக்காலம் பணிபுரிந்தார்.

இவரது மொழியியல் ஆய்வுகள் தமிழ் தன்னாட்சி பெறுவதற்கு வழி கோலுவன ஆகும்.

உலக மொழிகளிலும், இந்திய மொழிகளிலும், அவ்வம் மொழியினர் தத்தம் மொழிகளை வளப்படுத்திக்கொள்ள முனைந்து வருகின்றனர். பன்னூற்றுக் கணக்கான சொற்களை உருவாக்குவதிலும், சொற்களஞ்சியங்களை உருவாக்குவதிலும், பொறுப்புணர்வுடன் பணி புரிகிறார்கள்.

உலக மொழிகளிலும் இந்திய மொழிகளிலும் இன்று பெருமளவு வளர்ச்சி ஏற்பட்டுள்ளது என்று சொல்லலாம். தமிழில் போதுமான அளவு

வளர்ச்சியின்றி இருப்பது வருந்துதற்குரிய வொன்றாம்.

பாவாணர் தம் மொழியாய்வுப் பணிகளின் முதிர் பேரறிவால் உருவாக்க இருந்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலிக்குத் தமிழக அரசு எல்லா ஏந்துகளையும் காலத்தோடு அளித்திருந்தால் தமிழ் ஏனைய மொழிகளைப் போல ஏற்றம் பெற்றிருக்கும்.

அவரின் மறைவுக்குப் பின்னாலே, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி சில மடலங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவை இனித்தமிழுக்கு வளத்தைச் சேர்க்கும்.

பாவாணரின் பேருழைப்பே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியாகும். இவ்வகர முதலியை வெளியிடுவதில் பாவாணர் பேரவாக் கொண்டிருந்தார். தமிழ்விடுதலைக்கு இவ்வகர முதலியே துணைசெய்யும் என்றும் சூளுரைத்தார்.

ஆனால், அவர் இருந்தபோது தமிழ் மக்களும் தக்கமுறையில் அவரைப் பயன்படுத்திக் கொள்ளாதது பேரிழப்பாகும்.

அவருடைய ஆய்வுகளை, நெறிமுறைகளைக் கொள்கைகளை வெளிக்கொணர்வதே தமிழர்தம் கொள்கையாக இனிமேல் இருக்கவேண்டும். அதுவே தமிழுக்குச் செய்யும் பெருந்தொண்டாகும்.

# 5. இசைத் தமிழ் அறிஞர்

பாவாணர் இலக்கியப் பெரும்புலவர்; இலக்கணத் தேர்ச்சி உடையார்; உரைவல்லார்; மொழிநூல் முனைவர்; வரலாற்றாய்வாளர்; வேர்ச்சொல்லாய்வு வேந்தர்; பாவலர்; நாவலர்; சிறந்த தமிழாசிரியர்; பண்பாளர்.

பழங்காலத்தில் தமிழாசிரியர்கள் பல்கலை அறிஞர்களாகவே இருந்து வந்துள்ளனர். இசை, மருத்துவம், வானியல், கணியம் யாவும் அறிந்திருந்தனர்.

பழந்தமிழ்ப் புலவர்களைப் போன்றே பாவாணரும் இசைப்புலமை மிக்கவராகத் திகழ்ந்துள்ளார். பாடுவதில், இசைக்கருவிகளை இசைத்து மகிழ்வதில் ஆர்வம் உடையவர்.

பாவாணர் மாணவப்பருவத்திலேயே பாட்டெழுதும் திறமுடையார்; பண்டித மாசிலாமணி என்பவர், பாவாணர்க்கு ஆசிரியர். அவ்வப்போது அவருடைய பாடல்களைத் திருத்தித் தருவார். அவரே பாவாணர் பணியேற்கும் முன்னர், 'கவிவாணன்' என்று சான்றளித்தார்.

பாவாணர்க்கு இயல்பாகவே இசையார்வம் உண்டு. பண்ணோடு (அராகம்) பாடக்கூடியவர்;

பண் வகைகள் நன்கறிந்தவர்; முறையாக இசை பயின்றவர்; இசைக்கருவிகள் இசைப்பதற்கு அறிந்திருந்தார்.

இசைப்பெட்டி (ஆர்மோனியம்), கின்னரம் (பிடில்), மதங்கம் (மிருதங்கம்) வீணை ஆகியவை இசைப்பதில் வல்லவர். தன்னை மறந்து கின்னரம் இசைப்பார்; அதில் தன்பெருந்துயரெல்லாம் மறப்பார்.

அவர் யாழ்ப்புலவர் இராசகோபாலரிடம் இசை கற்றார்.

யாழ்ப்புலவர் இராசகோபாலர் பற்றியும் இவர் பாடியுள்ளார்.

*இன்னிசை யாழ் வல்லான். இன்சொல் எழில் முகத்தான்.*
*என்னிடை அன்பால் இசைநுவன்ற - இன்னியலான்.*
*மன்னார் குடியிராச கோபாலன் மாணடிகள்*
*மன்னுக என்றன் மனத்து*

என்னும் பாடலை 'இசைத்தமிழ்க் கலம்பகம்' என்னும் நூலில் பாடியுள்ளார். மேலும்,

கொலுமவரெகத என்ற மெட்டு. (தியாகராச கீர்த்தனம்)

பண் - (தோடி) தாளம் - முன்னை (ஆதி)

**பல்லவி**

இசையினும் இன்பம் வேறுண்டோ
எவ்வகை யுயிர்க்கும்

**துணைப் பல்லவி**

*வசையற வாழுலகில் வழங்கறம் இரண்டிலும்*
*இசைபெற ஈரின்பமும் இருமடி யாக்கும் - இசை*

**அடி**

*மரஞ்செடி கொடி பயிர் மகிழ்ந்து முந்தி வளரும்*
*மருவறு நச்சுப்பாம்பும் நடஞ்செயும் நல்ல பாம்பாம்.*
*முறஞ்செவி யானையும் முதையில் மயங்கி நிற்கும்.*
*முளையிளஞ் சேய்முதல் மூதும் நோயும் முடிவும் - இசை*

பல்லவி என்னுஞ்சொல் வடமொழியில் இல்லை. கருநாடக சங்கீதம் என்பது பண்டை இசைத்தமிழின் பெயர் மாற்றமே!

பல்லவி பன்முறையும் அவாவப்பெற்று நிற்பதால், 'பல்லவாவி' என்னுஞ்சொல் பல்லவி என்று மருவியிருக்கலாம். சரணம் = அடி (அல்) பாதம்.

'தொகையரா' என்னும் உருதுச்சொற்கு 'உரைப்பாட்டு' என்பது ஒத்த தமிழ்ச் சொல்லாகும்.

**தாளப்பெயர்கள் :**

| **பிறமொழி** | | **தமிழ்** |
|---|---|---|
| ஏகம் (வ) | - | ஒற்றை |
| ஆதி | - | முன்னை |
| ரூபகம் | - | ஈரொற்று |
| சம்பை | - | மூவொற்று |
| திரிபுடை | - | முப்புடை |
| சாப்பு (உருது) | - | இணையொற்று. |

- இசைத்தமிழ்க் கலம்பகம் பாகம். 1 முன்னுரை; பாவாணர்.

இயற்றமிழ்ப் புலமையும், இசைத்தமிழ்ப் புலமையும் ஒரு சேர உடையவர்கள் மிகச் சிலரே! அவர்களுள்ளும் தமிழுணர்வுடையவர்களாகவும் தமிழ்ப் பேராளர்களாகவும் உடையவர்கள். விரல்விட்டு எண்ணக் கூடிய ஒரு சிலரே பாவாணர் மிகச் சிறந்த இசைப்புலமை உடையவராக இருந்தார். இருந்தும், அவரது வாழ்நாட்பணிகள் மொழி ஆய்விலும், தமிழ் வளர்ச்சியிலும் மிகுதியாயின அதனால் அவர் இசைப்புலமையைப் பலரும் அறிந்து கொள்ள இயலவில்லை.

பாவாணர்க்குத் தியாகராாசர் உருப்படிகளில் (கீர்த்தனைகள்) நன்கு பாடிப் பழகிய பயிற்சி உண்டு. இசையறிஞர்களோடும் பாவாணர்க்குத் தொடர்புகள் மிகுதியாக உண்டு. பாவாணரின் இசைப்புலமையை அவரின் வாழ்வியல் நிகழச்சிகளில் இருந்து நன்கு தெளிந்து கெர்ளலாம்.

இசையறிஞர் விபுலானந்தர் யாழ்நூலின் சில பகுதிகளைத் **தமிழ்ப் பொழில்** இதழில் தொடராக வெளியிட்டு வந்தார். அதனைக் கண்ட பாவாணருக்கு அவரின் ஆய்வு முதலிலேயே கோணியதாகத் தோன்றியது.

குரல் என்பது மத்திமமே என்ற அவரின் கட்டுரையை மறுத்துப் பாவாணர் **செந்தமிழ்ச்செல்வியில் குரலே சட்சம்** என்ற கட்டுரை வரைந்தார். பாவாணரின் கட்டுரையை விபுலானந்தரின் மாணவர் வெள்ளைவாரணனார்

மறுத்து எழுதினார். அந்த மறுப்பிற்கும் மறுத்து எழுதினார். அந்த மறுப்பிற்கும் மறுப்பு வரைந்தார் பாவாணர். இசைப் புலமை சான்ற இசையறிஞர் ஒருவரின் கருத்தை மறுப்பதென்றால் அவ்வாறு மறுப்பவர் எந்த அளவு இசைத்திறம் உடையவராக இருப்பர் என்பது சொல்லாமலே விளங்குவதாகும்.

இசை ஆய்ந்த பெருமக்களுள் ஆபிரகாம் பண்டிதர் காலத்தால் முதன்மை பெற்றவர் தஞ்சைப் பண்டிதர். ஆயப்பாலை வட்டப்பாலை, பாலைத் திரிபு முறைகள் பற்றி நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளார் என்று பாவாணர் பண்டிதரை அளந்து அறிந்து பாராட்டியுள்ளார். ஆனால், மு. ஆபிரகாம் பண்டிதர் விரிவாக ஆராய்ந்த 24 அலகுமுறைக் கணக்குகளைப் பாவாணர் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது அறியத்தக்கது.

மதுரை நாதசுர மேதை பொன்னுசாமிப் பிள்ளை தாய்ப்பண் 32 என்றும், கோவை வீடுகள், (சுரத்தானங்கள்) பதினாறு அல்ல, பன்னிரண்டே என்றும் வற்புறுத்தியுள்ளார். இச்செய்திகளையும் பாவாணர் ஒப்புக் கொண்டுள்ளார்.

இசை அணிகலமாகிய (சங்கீத பூஷணம்) எசு. இராமநாதனார் மயங்காமரபின் இசைமறை காட்டிக் குரலே சட்சம் என்னும் பழங் கொள்கையைப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். கு. கோதண்ட பாணியார் ஐந்திசை முறை ஏழிசையில் கிளை ஆய்ந்து வகுத்ததே என்றும்,

பன்னீரிசை முறையும் அவற்றின் இடைவெளிகளாக இருபத்தீரலகு முறையும் தொன்றுதொட்டு வரும் தமிழிசையில் என்றும் கூறியுள்ளார் என்று பாவாணர் பாராட்டியுள்ளார்.

(மேற்கண்ட செய்திகளை, ஞா. தேவநேயரின் நற்றமிழ் இசை ஆய்வில், பாவலர் வீ.ப.கா. சுந்தரம் அறிவித்தள்ளார்.)

பாவாணர் பழந்தமிழ் இசைப்பாடல்கள் நன்கறிந்தவர்; பரிபாடல், தேவாரத் திருவாசக இசைப்பாக்கள், சிலப்பதிகார இசைப்பாக்கள், பற்றியும் அறிந்தவர்.

பாடவும், பாடல் எழுதவும், தெரிந்தவர். இசை இலக்கணமும், பண்ணின் திறன்களும் நன்குணர்ந்தவர் பாவாணர்.

பாவாணரின் **இசைத்தமிழ்க் கலம்பகத்தில்** ஒருபாட்டு:

‘கண்ணா கருமைநிறக் கண்ணா என்ற மெட்டு’

( படம் : ‘நானும் ஒரு பெண்’ )

**பல்லவி**

என்னே! தமிழ் இளமை என்னே! - அதற்
கீடான தொன்றில்லையே - இதை
மறுப்பாருண்டோ என்றும் மறைப்பாருண்டோ- எதிர்
மாற்றாரும் மறப்பாருண்டோ? - என்னே

அடி - 1

*முதன்மாந்த ரோடுதோன்றி முதிதாயினும் - மக*
*மொழியாவும் பலவாகக் கிளைபோயினும்*
*இதுபோதும் முன்போல்மெல் லியல் தாங்கியே*
*இளஞ்சேயர் பிணியார்வாய் எளிதாகவே*

அடி - 2

*இலத்தீனம் வடநாவல் மறையாரியம்*
*ஏராளம் துணைகொண்டும் இழவானவே*
*இனத்தாரும் வேற்றாரும் நெடுங் காலமாய்*
*எதிர்த்தே தீங் கிழைத்தாலும் இருக்கும் தமிழே!*

***இசைத்தமிழ் கலம்பகம் பக்.18***

வெண்பா - ஆசிரியம், கலி. கலிவிருத்தம், ஆசிரிய விருத்தம், கொச்சக ஒரு போகு, சந்த விருத்தம், நொண்டிச்சிந்து, இசைப்பாடல், நாட்டுப்புறப் பாடல்கள், திரை இசை மெட்டமைந்த பாடல் ஆகிய பாவகைகளில் இயற்றியுள்ளார்.

*பாணர்என்னும் இசைக்குலத்தைப்*
*பாழ்படவே தள்ளியதால்*
*மானமுள்ள இசைத்தமிழும்*
*மறைந்திட்டதே வழங்காமல்*

***- செந்தமிழ்க் காஞ்சி பக். 18***

என்று அக்காலத் தமிழிசையின் நிலையை அவர் பாடியுள்ளார்.

வகுப்பறையில், செய்யுள்களை இசையோடு பாடி மகிழ்வித்துள்ளார். தாமே பாட்டெழுதி,

தாமே அதற்குரிய பண், தாளம் அமைத்துப் பல பாநூல்கள் வெளியிட்டுள்ளார்.

**பாவாணர் எழுதிய பாநூல்கள்:**

*சிறுவர் பாடல் திரட்டு (1925)*

*செந்தமிழ்க் காஞ்சி (1937)*

*இசைத் தமிழ்க் கலம்பகம் (1966)*

*இசையரங்கு இன்னிசைக் கோவை (1969)*

*கிறித்தவக் கீர்த்தனம் (1932) (1981)*

இருநூறு பக்க அளவில், இசைத்தமிழ்ச் சரித்திரம் என்னும் நூலையும் எழுதியுள்ளார். அந்நூல் வெளிவரவில்லை. அந்நூல் வெளிவந்தால் இசைக்கலையின் மாண்பு இனிது விளங்கும்.

# 6. பண்பாளர் பாவாணர்

பாவாணர் சிறந்த பண்பாளர். திறந்த மனமுடையவர்; அறிவாற்றல் மிக்கவர்; தொண்டிற்சிறந்தவர்; தூயர்; பகைமை பாராட்டாதவர். வறுமையிற்செம்மை படைத்தவர். வாய்மை அறங்கண்டவர். நல்லவர். நாணயமானவர். மானமுள்ளவர்.

பாவாணர் கூற்றுப்படி 50,000 ஆண்டுகளாகத் தமிழரிடத்து ஊறி உயிரிற்கலந்து வரும் பண்புகளுள் காதல் - வீரம் - மானம் ஆகியன தனிச்சிறப்பு வாய்ந்தவை. இன்றும் வழிவழியாய்த் தொடர்ந்து வருவன. அத்தமிழ்வழிப் பண்புகள் பாவாணரிடத்தும் மிகச்சிறந்து விளங்கின.

பாவாணரிடத்து வறுமை இருந்தாலும், அறிவாற்றலில், ஆய்வுத்துறையில் மாமன்னரைப் போல் விளங்கி வந்தார். பழகுதற்கினியர்; பழம்போன்று இனிக்கும் பேச்சாளர். பலமணி நேரம் பேசினாலும் நேரம் போவதே தெரியாமல் பேசலாம். அவர் ஒரு கருத்துக் கருவூலம்.

கரும்பொன்மேனி; கள்ளமற்றவர்; எளிமை ஆனவர்; வலிய உளம் படைத்தவர். அரிமா நோக்கும், ஆனைநடையும், பெருமிதமும்

உடையவர். குப்பாயம் அணிந்திருப்பார். பொன்வரித் துண்டு (சரிகை) அவர் கழுத்தை அணிசெய்யும். எடுப்பான தோற்றமுடையவர்; மேன்மைத் தமிழர்; மீசைத்தமிழர். செம்மாப்பு மிக்கார்.

*குப்பாய மேனி குலுங்கு நகையெழிலை*
*எப்போது காண்பேன் இனியுலகில் - அப்பாவோ*
*துஞ்சினாய் என்னுந் துயரப் பெருநெருப்பு*
*நெஞ்சை வெதுப்புமால் நீடு!*

*புலவர் மாமணி இறைக்குருவனார்.*

விளம்பரம் வேண்டாதவர். களப்போர்க் காவலன். படமெடுத்துக் கொள்ள விரும்பாத பாசறைப் பாவாணன். தமக்காக விழா எடுத்துக்கொள்ள விரும்பதவர். தமிழுக்கு விழாவெடுக்க விரும்பியவர்; எவையாக இருந்தாலும் அவை தமிழுக்குப் பயனளிப்பதாக இருக்கவேண்டும் என்று எண்ணுபவர்.

தன் வரலாற்றைப் பிறர் எழுதவும் விரும்பாதவர். தாமே எழுதுவதாகவம் சொன்னவர் - விழாவிற்குச் சுவரொட்டிகள்கூடப் பயன்படுத்த விரும்பாதவர். பொதுவாக ஆடம்பரத்தை விரும்பாதவர்; அடங்கி நடப்பவர்; அருந்தமிழ்க்குத் தீமை என்றால், எரிமலைபோல் கனன்று எழுபவர்;

*உயிர்ப்பாடும் முக்கழகம்! உணர்வாடும்*
*தமிழ்க் குரிசில்! உறைந்த கட்டித்*
*தயிர்போலும் செழுஞ்சொல்லால் மொழிப்பெருமை*
*காத்துவரும் தமிழ்மா வேந்தன்.*

*அயர்ப்பூருந் தமிழர்க்கு நினைவூட்டி*
*அயர்வகற்றும் தமிழ்ப்பே ராசான்!*
*செயிர்ப்பூரும் புலிப்பாய்ச்சால் அரிமாவின்*
*செந்நோக்கால் - தமிழைக் காப்பான்.*

*- பாவலரேறு பெருஞ்சித்திரனார்*

ஒரு பொன்னாடை நிகழ்ச்சியைச் சுட்டுகிறார் பாவாணர்.

பூம்புகார் இறுதிக் கூட்டத்திற்குப் பர்.மெ. சுந்தரமும் திரு கருணையும், என்னை வற்புறுத்தி அழைத்துச் சென்றனர். பேசச் சொன்னதற்கு மறுத்துவிட்டேன். ஆடை போர்த்தக் கூடாதென்று சொல்லியிருந்தேன்.

மகளிர் மஞ்சள் சட்டைத்துணி (4 முழம்) ஒன்றைத் திரு. கருணாநிதியிடம் கொடுத்திருந்தனர். அவர் பொன்னாடை போர்த்துவதாக அறிவிக்கப்பட்ட போது அம்மாபெருங்கூட்டத்தில் அவரை மதிப்பிழிவுபடுத்த மனமின்றி இசைந்தேன். அது மினுகை (சரிகை) இழையற்ற மட்டப்பட்டு, 20 ரூபாவிற்கு மேற்பொறாது. அமைச்சர் மூவர்க்கும் தருமபுரத் தம்பிரான் போர்த்தியது உண்மையான பொன்னாடை.

ஒவ்வொன்றும் முந்நூறு உருபா பெறும்.

பொன்னாடை போர்த்தினால் என் வருத்தம் மிகும் என்று சொல்லியிருந்தேன்.

அதுவுமன்றிப் பன்னாடை போர்த்தியது என்மனக்குறையைப் பன்மடங்காக்கியது.

*- (பாவாணர் கடிதங்கள் - பக் - 89)*

பாவாணர் கொள்கை மாறாக் குன்றாக வாழ்ந்தவர். அவரின் நெஞ்சப் புலப்பாட்டை பின்வரும் பெருஞ்சித்தரனாரின் பாடலால் அறியலாம்.

*'சாகின்ற தமிழ்க்குலத்தின் பழம்பெருமை*
*தனிச்சீர்மை எண்ணி எண்ணி*
*நோகின்ற நெஞ்சுடையான்; நொடிகின்ற*
*நிலையுடையான் தமிழ்ப்ப கைக்கே*
*வேகின்ற செந்தீயின் வெப்பன்னான்;*
*விறல்மறவன்; இளம்பயிர்க்கே*
*ஆகின்ற மழைபோலத் தண்ணளியால்*
*அருந்தமிழ்க்கே வாழ்வா னிங்கே!*

*- பாவலரேறு பெருஞ்சித்திரனார்*

பாவாணர் பெரியராயினும் சிறியவராயினும் எல்லாரிடத்தில் அன்பாகப் பேசுபவர்; எல்லாரையும் நன்கு மதிக்கக் கூடியவர்; இத்தகு பண்பு நலன்கள் யார்க்கு வாய்க்கும்?

தந்தை பெரியாரும் பெருஞ்சித்திரனாரும் மற்றவர்களிடத்தில் பேசும்போது மிகுந்த அன்போடும், மதிப்போடும் பேசக் கூடியவர்கள்.

பாவாணர் பிறர்நலத்தில் அக்கறை உள்ளவர். இயல்பாகவே தமிழர் நலத்தில் அக்கறை உள்ளவர்கள்.

*அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்*
*மக்கட்பண் பில்லா தவர்கள்*

என்று கூறுகிறது திருக்குறள்.

மக்கட் பண்பென்பது எல்லார்க்கும் வந்துவிடாது. அது பிறவியிலே வரவேண்டும். என்னதான் நிறையக் கற்றிருந்தாலும் சிலர்க்கே நற்பண்புகள் வாய்க்கும்.

'நட்பும் தயையும் கொடையும் பிறவிக் குணம்' என்று ஔவையும் கூறியுள்ளார்.

உலகில் ஆயிரமாயிரம் அரசியல் வாணர்கள் தோன்றலாம். அறிஞர் ஒருவர் தோன்றுவதற்கு ஆயிரமாண்டுகள் ஆகலாம். பாவாணர் சிறந்த அறிஞர். அவரைப் போற்றுதலும் காத்தலும் அரசின் கடமை; அறிஞரைக் காக்கும் அரசே அரசு. அறுபானாண்டுகள் முற்றி முதிர்ந்த ஓர் ஆராய்ச்சிக்கனியை ஆயிரங்கோடிப் பொன் கொட்டிக்கொடுத்தாலும் வாங்க முடியுமோ? அதைத் தமிழ்மக்கள் கருத்தில் கொள்ளவேண்டும்.

தந்தை பெரியார், பாவாணர், பெருஞ்சித்திரனார் போன்றவர்கள் புரட்சிக்கு வித்திட்டவர்கள். மறுமலர்ச்சிக்குப் போராடியவர்கள். புதுமைக்கு வழிகாட்டியவர்கள்; இனமானம் காத்தவர்கள். தாய்மொழி வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள். உண்மையை உணர்த்தியவர்கள். தமிழர்கள் இப்படித்தான் வாழவேண்டுமென்று முழங்கியவர்கள். அடிமைநிலையை அறுத்தெறிய

ஓடியாடி உழைத்தவர்கள்! - என்னே தமிழகம்? என்னே தமிழ்மக்கள்?

தற்பெருமை காட்டாத தமிழ் நெஞ்சம் பாவாணர் நெஞ்சம். தமக்குப் பிறந்த நாள், மற்ற சிறப்பு நிகழ்ச்சிகள், பாராட்டுகள் எவற்றையும் விரும்பாதவர் பாவாணர்.

''என்னால்தான் தமிழ் விடுதலை பெறவேண்டும்'' என்று தன் முனைப்போடு கூறி இருந்தாலும் அக்கூற்று அவரைப்போல் மற்றவர் இல்லாமையால் எழுந்த கூற்றாகும்.

இற்றை நிலையில் தமிழும், தமிழ்நாடும் இழிந்த பிணம்போல் உள்ளது. இயக்கமின்றி உள்ளது. தமிழர்க்கு எழுச்சியூட்டும் தமிழ்த்தலைவர் யாருண்டு?

ஒரு மூலையில் அமர்ந்துகொண்டு ஆய்வுகள் செய்யலாம்; மேடையில் முழங்கலாம்; காலத்திற் கொவ்வாக் கருத்துகளைக் காசுக்காகப் பேசிப் பேசி நாத்தேய்ந்து போயிருக்கலாம். இற்றைக்குத் தேவை, தமிழ் உணர்வு வெளிப்படும்படியாகப் பேசுவதும் எழுதுவதும்தாம்.

தமிழ் வாழ்ந்தால்தான் தமிழ் இலக்கியங்கள் வாழும்; தமிழர் வாழ்வர்; தமிழ்நாடு வாழும்.

அதற்குப் பாவாணர் எழுச்சி தேவை. தமிழகமெல்லாம் அவர் கொள்கை பரவவேண்டும். அவர் கொண்டு வாழ்ந்த பண்பாடு தமிழரிடத்தில்

தமிழறிஞரிடத்தில் பரவவேண்டும். பாவாணர்க்குத் தமிழ் என்றல் வெல்லம். தமிழன் என்றால் செல்லம்; அவருடைய ஆய்வுகள் தமிழ்நாட்டை வெல்லும்.

அவர் தூயதமிழிலேதான் எப்போதும் பேசுவார். நாமும் அவர்போலப் பிற மொழிச் சொற்கள் கலவாமல் பேசவேண்டும். தூய தமிழ்ப் பெயர்களை நம் குழந்தைகள் தாங்கவேண்டும்.

பாவாணர் பிற உயிர்களிடத்திலும் மிகுந்த அன்பு கொண்டவர். வள்ளுவத்திற்கு உரை வழங்கியவர் வழிமாறிப் போவாரா? 10 உருபாய் இருந்திருந்தால் அவர் தம் மனைவியைக் காப்பாற்றி இருப்பார்; வள்ளன்மை பேசுவோரெல்லாம் பாவாணர் வாழ்ந்த காலத்தில் யாருமில்லையோ?

ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டிலே அவருடைய அறுபதாண்டுக்கால ஆராய்ச்சி அறிவுப் பொழிவைச் சரியாகக் கேட்காமல் தமிழ் மக்கள் பண்பாடற்று நடந்து கொண்டார்களே அதுதான் இற்றைத் தமிழகமும் - ஒன்றே கால் மணி நேரம் உண்மை உணர்வோடு மாந்தன் பிறந்தகத்தைப் பற்றி உரைத்தாரே அவர்தாம் தமிழ் மீட்பர்; பாவாணர்; நல்லுணவு, நல்வீடு, நல்லாடை, இல்லாமல், தமிழ், தமிழ் என்று தமிழ் வல்லாராய் வாழ்ந்தாரே அவர்தாம் தமிழ் விடுதலைத் தணல்; பாவாணர் அறிவுச் செல்வத்தை அடைந்திடப் படையெடுப்பீர் இன்றே!

# 7. பாவாணர் உள்ளம்

தமிழர் தொன்மையை உலகிற்கு அளித்தவர் கால்டுவெல் பெருமகனார். தனித்தமிழ்க்கு வித்திட்டவர் பரிதிமாற் கலைஞர். செடியாகத் தழைக்கச் செய்தவர் நிறைதமிழ் மலையாம் மறைமலையடிகள்; நானே மரமாக வளர்த்து வருகிறேன்.

என் சொத்தெல்லாம் என் நூல் நிலையமும் ஆராய்ச்சியுமே.

என் நூலகம் மட்டும் ஏழு நிலைப் பேழைகள் கொண்டது.

எனக்கு வீடுமில்லை, காடுமில்லை, இருப்புமில்லை, எடுப்புமில்லை. நாற்பானாண்டாக இரவு பகல் அரும்பாடுபட்டு ஆய்ந்த ஆராய்ச்சிதான் என் முழுவுடைமை.

சங்கரலிங்க நாடார் வடக்கிருந்தென்ன, சின்னச்சாமி தீக்குளித்தென்ன? தமிழன் திருந்துவதாயில்லை.

எனக்கு நெஞ்சும் உண்டு. வயிறும் உண்டு; இவற்றுக்கு மேலே தன்மானமும் உண்டு.

நான் ஒரு பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவனாயின் தமிழ் விரைந்து ஆக்கம் பெறும்.

மறைமலையடிகள் போல் வாய்மையும், பெருந்தன்மையும் வாய்ந்த புலவர் ஒருவரேனும் இன்றிலர். அழுக்கலும், தற்பெருமையும் குறுநோக்கும் சான்ற புலவரிடம் (பழந்தமிழாட்சி நூலை)க் காட்டிப் பயனில்லை.

இனிமேல்தான் என் மொழியாராய்ச்சி உலகிற்கு வெளியாகும். அதனால் தமிழ் ஓங்கும் கழக நூல் விற்பனையும் உயரும்.

மறைமலையடிகளுக்குப் பின் தமிழ்த் தூய்மை பேணும் பேராசிரியன் யான் ஒருவனே என்பது தங்கட்குத் தெரியும். தமிழ்ப்பற்று என்பது தமிழ்த் தொண்டனைப் போற்றுவதே.

என் புலமையைப் பொறுத்த வரையில் மறைமலையடிகள் ஒருவரே மதிப்புரையோ முன்னுரையோ வழங்கத் தக்கவர்.

என் ஆராய்ச்சி முடித்துவிட்டதனால் இனிமேல் என் வாழ்நாளெல்லாம் இடைவிடாது நூல் எழுதிக்கொண்டே இருப்பேன். யான் எழுதியவை பிறரால் எழுதப்பெறும் திறத்தனவல்ல.

என் காலத்திற்குப் பின் வேறெவரும் என்போல் எழுதவும் முடியாது.

தமிழ்ப் பற்றுள்ளவர்தாம் என் நூல்களை வாங்கமுடியும்.

என் திருக்குறள் 'தமிழ் மரபுரை' ஒன்றே என் தகுதியைக் காட்டப் போதுமே.

எனக்குச் செய்வதெல்லாம் தமிழுக்குச் செய்வதென்று கருதிக்கொள்க.

எனக்குப்பின் என்னைப்போல் ஆய்பவர் தோன்ற ஒரு நூற்றாண்டாவது செல்லுமாதலால் யாக்கை நிலையாமை நோக்கி இதுவரை முடிந்த முடிவாகக் கண்டவற்றையெல்லாம் விரைந்தெழுதுவதில் இறங்கிவிட்டேன்.

யான் இன்று முதற்றாய்மொழி, வடமொழி வரலாறு என்ற இரு முதன்மையான நூல்களை எழுதுவதில் அழுந்தியிருப்பதால் எங்கும் எதற்கும் வரமுடியாது. இவற்றை எழுதி முடித்தபின் தெரிவிப்பேன்.

முதல் தாய்மொழி வெளி வந்தபின் எல்லாப் புலவரும் சொல்லாராய்ச்சி செய்யவொண்ணும்.

இனிமேல் எந்நாட்டிலும் எழுதப்படும் மொழி நூலுக்கு இதுவே அளவையும் அடிப்படையுமாகும். இது இறைவனால் வெளிப்படுத்தப்பட்டது.

முதல் தாய்மொழி என் முப்பதாண்டு ஆராய்ச்சியின் விளைவு அது. அதனால்தான் எதிர்காலத் தமிழுக்கு ஆக்கம் உண்டாகும்.

ஒரு வீட்டின் உரிமையைக் காப்பது ஆவணம். ஒரு நாட்டின் உரிமையைக் காப்பது உண்மை வரலாறு.

என் தமிழ்ப் போராட்டம் அண்மையில் தொடங்கும். எனக்குப் பின் தமிழையும் உண்மையான மொழி நூலையும் வளர்க்கப் பன்னிரு மாணவரை அமர்த்துவேன்.

என் நூல்களுள் தலை சிறந்ததும் வேறெவரும் செய்ய முடியாததும் தமிழின் தலைமையை நிலை நாட்டுவதும் அவ்வகர முதலி ஒன்றே. என் ஆராய்ச்சியின் முழு விளைவும் அஃதே.

தமிழை வடமொழிப் பிணிப்பினின்று மீட்பதே என் வாழ்க்கைக் குறிக்கோள்.

இறைவன் என்னையே இறுதித் தொண்டனாக அமர்த்தியிருப்பதால் இனிமேல் அகர முதலிப் பணியிலும் தமிழ்ப் போராட்டத்திலுமே ஆழ்ந்து ஈடுபடவொண்ணும்.

மொழியாராச்சியிலும் உலக வரலாற்றறிவும் இல்லாதவர் தொல்காப்பியத்தைத் தெளிவாய் உணரமுடியாது.

என் வாழ்க்கைக் குறிக்கோள் தமிழை ஆரியத்தினின்று மீட்பது.

நான்தான் என் தமிழ்க் கொள்கையால் இளமை முதல் இடர்ப்பட்டு வருகின்றேன்.

> இனிமேல் தமிழியக்கமென்றும் தென்மொழி இயக்கமென்றும் பிரிந்திருத்தல் கூடாது. ஓர் இயக்கமாய் இருத்தல் வேண்டும். ஒற்றுமை உரம். ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.

தமிழை வடமொழியினின்று மீட்கவேண்டும் என்னும் குறிக்கோள் கொண்டே நான் கற்றாய்ந்தவன். இதற்கு மிகுந்த நெஞ்சுரமும் தற்சார்பு மனப்பான்மையும் வேண்டும். இவை பிறர்க்கில்லை.

என் ஆருயிர் மனைவியார் பிரிவுத்துன்பம் ஆற்றொணாததும் தாங்கொணாததும் ஆதலின் இன்னும் மூன்றாண்டிற்குமேல் இருக்க விரும்பவில்லை. அதற்குள் தமிழ் வடமொழியினின்று மீட்கப்பட்டுவிடும்.

- *பாவாணர் கடிதங்கள்*

நான் ஒருவன் இன்றேல் எதிர்காலத்தில் தமிழ் இருக்குமென்று கருதுகின்றீர்களா? நான் தமிழுக்காகப் பட்ட பாட்டை இறைவன்தான் அறிவான். என்பணிக்கு இறைவன் துணை உண்டென்னும் நம்பிக்கையினாலேயே இன்னும் இதில் ஊன்றி நிற்கின்றேன்.

என்காலத்தில் தமிழ் விடுதலையடையாவிடின் இனி ஒருக்காலும் அடையாதென்பது திண்ணம். தமிழ் விடுதலைக்கும் முன்னேற்றத்திற்கும் அடிப்படையாக நாம் நாட்டவேண்டிய உண்மை தமிழ் குமரிநாட்டு மொழி என்பதே!

அரியேறன்ன பாவாணரின் வீறுகொண்ட முழக்கங்களை அவரின் கடிதங்கள் வாயிலாக அறிய முடிகின்றது. அம்முழக்கங்களினின்று அவருடைய பெருமிதம், தன்னம்பிக்கை, உண்மைத் தமிழ்ப்பற்று,

ஓயா உழைப்பு, ஒப்பற்ற புலமை ஆகியவற்றை நாம் அறிந்து கொள்ளலாம்.

பாவாணர் நம்மை விட்டுப் பிரிந்து இருபது ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. பாவாணர் வழியில் நின்று அவர் கொள்கைக்காகப் பாடுபட்டு இன்னும் யாரும் வெற்றி காணவில்லை.

பாவாணரைப் போல் பிறந்து வர இன்னும் ஒரு நூற்றாண்டாகுமோ என்னவோ? தமிழ் விடுதலையைத் தம் வாழ்நாளிலேயே காணவேண்டும் என்று அவர் துடியாய்த் துடித்தார்.

மொழி ஆய்வுக்காகக் கடுங்கோடையில் ஈரத்துணியைத் தலையில் கட்டிக்கொண்டு ஆய்வுகள் செய்தார். சாளரங்களில் ஈரத்துணிகளைக் கட்டிவிட்டு ஆய்வுகள் செய்தார்.

அவர்புரிந்த ஆய்வுகள் தமிழருக்காக! தமிழ் மொழிக்காக! தமிழ்ப்பகை எதிர்க்க! தமிழை மீட்க!

# 8. இயக்கம் கண்ட ஏந்தல்

பலர் ஒன்று கூடிச் சிறந்த கொள்கைகளை உலகில் நிலை நாட்டவே இயக்கங்கள் தேவை. புதுமையை, எழுச்சியைப் புரட்சியை உருவாக்கவே இயக்கங்கள் தேவை. பலரும் இணைந்து கொள்கைகளை உருவாக்கியும் செயற்படுத்தவும் இயக்கம் தேவை. அத்தகு முறையில், தமிழை நிலைப்படுத்தவும், ஆட்சியில் தமிழை அமர வைக்கவும், அயல்மொழியினின்று தமிழை மீட்கவும், பாவாணர் இயக்கம் கண்டார்.

இயக்கத்தில் இணைந்து இடையறாது உழைத்தார்; தனித்தமிழ்க் கொள்கைகளைத் தமிழர் நெஞ்சில் ஏற்றினார்.

இலால்குடிக் கழக உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் புலவர் சேந்தமாங்குடியார், 1960 ஆம் ஆண்டில் அண்ணாமலை நகர் வந்து பாவாணரிடம், தனித்தமிழ்க் கழகம் தோற்றுவிக்கவேண்டும். அதற்குத் தங்களின் ஒத்துழைப்புத் தேவை என்று கூறியுள்ளார். ஈராயிரம் உறுப்பினர்களையும் சேர்த்துள்ளார். பாவாணரும் அதற்கிசைந்துள்ளார்.

கழகம் நன்கு செயற்பட்டால் ஆட்சியையும் பிடிக்கலாம்; தமிழாட்சியை அப்போதுதான் நிறுவமுடியும். தனித்தமிழ்ப் பற்றிருந்தால்போதும்; தமிழைக் காப்பதே நம் நோக்கம் என்றெல்லாம் கூறியுள்ளார்.

தமிழ் என்றாலே அது தனித்தமிழ்தான். 'தமிழ்க்கழகம்' என்றிருத்தலே நன்று என்று பாவாணர் கூறியுள்ளார். 6.10.1968இல் திருச்சியில் அமைப்புக்கூட்டம் கூட்டி "உலகத் தமிழ்க் கழகம்" உருவாக்கப்பட்டது. சேந்தமாங்குடியார் முயற்சியால் உருவாக்கப்பட்ட தனித்தமிழ்க் கழகம் உலகத்தமிழ்க் கழகத்தோடு இணைந்து ஒன்றாகிவிட்டது.

உ.த.க.வின் தலைவர் பாவாணர். பொதுச் செயலாளர் பாவலரேறு பெருஞ்சித்திரனார்; துணைப் பொதுச் செயலாளர் திரு. இறைக்குருவனார். பொருளாளர் செங்கைச் செந்தமிழ்க்கிழார். மாவட்ட அமைப்பாளர்கள் - திரு. மு. தமிழ்க் குடிமகனார், சேந்தமாங்குடியார், திரு. இரா. இளவரசு, திரு. பா. வளனரசு, திரு. மி.மூ. சின்னாண்டார், திரு. வி.பொ. பழனிவேலனார் ஆகியோர்.

உலகத் தமிழ்க்கழகத்தின் ஒப்பற்ற தகுதிமிக்க தலைவராகத் தமிழன்பர்கள் யாவரும் பாவணரையே மதித்துவந்தனர். பாவாணரோ மறைமலையடிகளே உலகத் தமிழ்க் கழகத்தின்

தலைவர். யான், அவர் தனித்தமிழ் இயக்கத்தை வழி நடத்திச்செல்லும் தூய தமிழ்த் தொண்டன் என்றே அவர்க்குள்ள அடக்கத்தோடு கூறியுள்ளார்.

ஒரு பேரெழுச்சி தமிழகத்தே பாவாணர் தலைமையில் பொங்கி எழுந்தது. 28.29.12.1969 ஒரு மாநில மாநாடு மலர்ந்தது. அரசியல் கட்சி மாநாட்டைப் போல் தொண்டர்களின் துணையால் துடிப்புக் கொண்டது.

அம்மாநாட்டில் பாவாணரின் 'திருக்குறள் தமிழ் மரபுரை' வெளியிடப்பட்டது.

மாநாட்டுப் பொறுப்பாளராக முனைவர். மு. தமிழ்க் குடிமகனார் இருந்தார். தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து அணிதிரண்டு சென்றனர். தனித்தமிழ் ஆர்வலர்கள்.

இரண்டாவது மாநாடு மதுரையில் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

மூன்றாம் மாநாடு, மாந்தன் பிறந்தகம் குமரிநாடே என்னும் தீர்மானிப்பு மாநாடு. இது தஞ்சையில் நடைபெற்றது.

நான்காம் மாநாடு சென்னைப் பெரியார் திடலில் (1978) நடைபெற்றது.

உலகளவில், தென் மாநிலங்களில், உ.த.க. கிளை அமைப்புகள் உருவாகவேண்டும். கொடியமைக்க வேண்டும். இயக்க இதழ்வேண்டும்

என்றெல்லாம், முடுக்கமான செயற்பாட்டோடு எழுந்தது. உ.த.க. அமைப்பு.

பின்னர் படிப்படியே தளர்ச்சியடையத் தொடங்கியது உ.த.க. அமைப்பு. வெடிப்புற்றது பாவாணர் நெஞ்சம்; துடிப்பிழந்தது தமிழகம்; பிரிவினைகள் தோன்றின. தன் முனைப்புகள் எழுந்தன.

தகுதிமிக்க தலைவர் ஒருவரால், பேரறிஞரால் உருவாக்கப்பட்ட உலகத் தமிழ்க்கழகம், உருவின்றித் திரிந்து போனதென்றால் என்னே தமிழர்? என்னே தனித்தமிழ் உணர்வாளர்? என்னே இயக்கம்? யார்தான் உயர்ந்தார்? எதுதான் உயர்ந்தது? தமிழ்நாடும் ஆங்கில நாடாய்த் திரிந்து கொண்டிருக்கிறது.

பாவாணர்க்குப் பலரும் பலவகையில் உதவியாய் இருந்தனர். நூல் வெளியீட்டுக்கும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வெளியீட்டுக்கும் பெருந்தொகை திரட்டவும் முயன்றுள்ளனர். அன்பர்களின் பொற்கிழி அளிப்புகளும் பாராட்டுகளும் நிகழ்ந்துள்ளன. நிகழ்ந்த யாவும் குறிப்பிட்ட தமிழுணர்வுள்ளவர்களால் மட்டுமே நிகழ்ந்தன.

தமிழ் மக்கள் ஆர்வம் அறவே இல்லை. அவர்கள் நாட்டம் ஆங்கிலத்தின்மீது சென்றுவிட்டன. அரசியல் கட்சிகள் எல்லாம் தம்மை வளர்த்துக் கொள்ளவே முனைந்தன.

வேங்கைகளின் நடுவிலே வெள்ளாடுகள் விடுதலைக்குக் கத்துவதா?

ஓநாய்களின் நடுவிலே புள்ளிமான்களின் துள்ளலா?

நரிகளிடத்திலா நல்லறத்தைக் காண்பது?

உலுத்தமரங்களா கனிகளை உதிர்க்கும்?

தமிழறிஞர்கள் பலரும் தமிழின் பெருமையெல்லாம் எடுத்துரைத்துப் போந்தும், தமிழ்மக்கள் புறக்கணிக்கின்றனர்.

தமிழர்களாகிய நாம் தமிழ் மொழியைப் போற்றவேண்டும். தமிழ் நூல்களை எடுத்துப் படிக்க வேண்டும்.

தமிழ் வளர்ச்சிக்குத் தமிழாசிரியர்கள் மட்டும் பொறுப்பல்லர். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட, ஆசிரியர்களுக்கும் பொறுப்புள்ளது.

அலுவலகங்களில் பணிபுரியும் அலுவலர்க்கும் பொறுப்புள்ளது. தனித்தமிழ் வளர்ச்சிக்குத் தமிழர்கள் அனைவரும் பாவாணர் நூல்களைப் படிக்கவேண்டும்.

# 9. பாவாணர் கொள்கைகள்

பாவாணர் கொள்கைக்ள் மிக உயர்ந்த கொள்கைகள். தமிழர்க்கு வேண்டிய கொள்கைகள்; தமிழ் வளர்ச்சிக்கு வேண்டிய கொள்கைகள்.

பாவாணர் கொள்கைகளால் தமிழின் பெருமையும் தமிழர் பெருமையும் உலக அளவில் பரவும் என்பது உண்மை.

பாவாணர் நூல்கள் பலமொழிகளில் மொழி பெயர்க்கப்பட வேண்டிய நூல்கள்.

பாவாணர் ஆய்வுகள், ஆழமும் விரிவும் உடையன. தமிழின எழுச்சிக்குத் தூண்டுவன.

தூங்கிய தமிழன் தொடையில் மாற்றார் திரித்த கயிறுகள் கணக்கற்றவை. ஆனையை விழுங்கக்கூடிய ஆனைகொன்றான் பாம்பைப்போல தமிழருடைய இலக்கண இலக்கிய கலை பண்பாடு நாகரிகம் ஒழுக்கம் எல்லாவற்றையுமே மாற்றார் விழுங்கும் நிலையைப் பாவாணர் ஆய்வுகள் தடுத்து நிறுத்தின.

பாவாணர் ஆய்வுக்கு முன்னே, மறைமலையடிகளார், பாம்பன் சுவாமிகள், ஞானகிரி நாடார், மாகறல் கார்த்திகேயனார்,

ஞானப்பிரகாசனார், சுந்தரம் பிள்ளை ஆகியோர் மொழி நூல்கருத்துகளையும், தமிழர் வாழ்க்கைச் சிறப்புகளையும் கூறியிருந்தார்கள். ஆனாலும், பாவாணர் ஒருவரே முழுமூச்சாய் இறங்கி ஆய்வுகள் செய்தார்.

அவர் ஆராய்ச்சியின் முடிவான செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி தமிழ்மொழிக்கொரு பேரரணாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

பாவாணர், தாம் எழுதிய சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பற்றிச் சொல்லும்போது,

> இன்று தமிழிலுள்ள பெரிய அகரமுதலி தமிழ்ப்பகைவரால் தொகுக்கப்பட்டு, அடிப்படைத் தமிழ்ச் சொற்களையெல்லாம் வடசொல்லென்று காட்டியிருப்பதால், தென்சொற்கட்கெல்லாம் பொருள் கூறுவதோடு வேர்ப்பொருள் காட்டித் தமிழென விளக்கும் சொற்பிறப்பியல் அகரமுதலி இன்றியமையாததாகின்றது. இதற்கு ஒரு கோடி உருபா வேண்டினும் ஒதுக்கித் தொகுப்பிப்பது தமிழரசின்மேல் விழுந்த தலையாய க ைமயாகும் என்று சொல்லி உள்ளார்.

அண்டை மாநிலங்களிலுள்ளோர் தத்தம் மொழி வளர்ச்சிக்காகப் பன்னூறாயிரம் செலவு செய்கின்றார்கள்.

மேலை நாடுகளில், பேருழைப்பையும் பெருபணத்தையும் செலவு செய்து வரலாறுகளை உருவாக்குகிறார்கள்.

தமிழ் மக்கள்தாம் எதிலும் அக்கறையில்லாமல் வாழ்ந்து வருகின்றார்கள். அக்கறையுடன் தம்முயிர்போல் எண்ணி ஆய்வுகள் செய்த பாவாணர்க்கு அளித்த ஒத்துழைப்புகளும் மிகக் குறைவாகவே இருந்தன.

> தமிழ் நெடுங்கணக்கு வடமொழி வண்ண மலையைத் தழுவியது என்றும், தமிழ் வரி வடிவுகள் பிராமி எழுத்தினின்று திரிந்தவையென்றும் தமிழ் அடிப்படைச் சொற்களெல்லாம் வட சொல்லென்றும், தொல்காப்பியம் பிராதி சாக்கியங்களையும் பாணினீயத்தையும் சமஸ்கிருத நாடக நூல்களையும் அலங்கார சாத்திரத்தையும் பிறவற்றையும் பின்பற்றியெழுந்ததென்றும், ஐந்திணையென்னும் பகுப்பு வேதத்திற் 'பஞ்சஜன' என்று சொல்லப்பட்டதே என்றும்,
>
> திருக்குறள், அறத்துப்பாலில் மனுதரும சாத்திரத்தையும் காமாந்தகர் நீதிசாரத்தையும் பொருட்பாலிற் கௌடிலியர் அர்த்த சாத்திரத்தையும், காமத்துப்பாலில் வாற்சாயனர் காமசூத்திரத்தையும் தழுவியதென்றும், ஸ்ரீ வல்லப என்பவரே திருவள்ளுவர் என்றும் முப்பால் என்பது

திரிவர்க்க என்பதன் மொழி பெயர்ப்பென்றும் (தமிழ் இலக்கிய வரலாறு. பாவாணர். முன்னுரை) கூறிவந்தால் மானமுள்ள தமிழர் மனமடங்கிப் போகலாமா? பாவாணர் எழுந்தார்! பொய்மைகளை வேரறுக்கப் பொங்கி எழுந்தார்; ஆய்வுகள் நடத்தினார்.

*உலக முதல் மாந்தன் தமிழன்!*
*உலக முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரிக்கண்டம்*
*உலக முதன்மொழி தமிழே!*
*திராவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமும் தமிழே!*

ஆகிய வரிகளுக்கு வாழ்வளிக்கவே பாவாணர் தம் வாழ்வைத் தமிழுக்களித்தார்.

உலகளவில் வெளிவந்திருந்த, மாந்தனூல்கள், மொழி நூல்கள், நில நூல்கள் யாவும் கற்றார். ஆங்காங்கு மறைந்து கிடந்த தமிழ் வரலாற்றைத் தமிழர் வரலாற்றை, மொழி நூல் உண்மைகளை வெளிக்கொணர்ந்தார்.

குமரிக்கண்டமே மாந்தன் பிறந்தகம் என்பதற்கும், அம்மாந்தன் தமிழனே என்பதற்கும் பாவாணர்நூல்கள் சான்றுகளுடன் நிறுவிக் காட்டி நன்கு பறைசாற்றுகின்றன.

அதுபோலவே, உலக மொழிக் கொள்கைகளையும், திராவிடத்திற்குத் தாய் தமிழ் என்பதையும் ஆரியத்திற்கு மூலமென்பதையும் மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

இந்துமாவாரி முன்பு ஒரு நிலமாய் கண்டமாயிருந்தது. அது சந்தாத் தீவுகளிலிருந்து ஆசியாவின் தென்கரை வழியே ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரைவரை பரந்திருந்தது. இப்பழங்காலக் கண்டத்திற்கு அதில் வாழ்ந்திருந்த மாந்தன் போன்ற விலங்குகள்பற்றி, கிளேற்றர் (Sclater) என்னும் ஆங்கிலேயர் இலெமூரியா என்று பெயரிட்டிருக்கின்றார்.

இலெமூரியாவினின்றும், அதன் மக்களினின்றுமே மாந்தனின் இற்றை வகுப்பினங்களெல்லாம் தோன்றியுள்ளன என்னும் இன்புறுத்தும் உண்மையைக் காண்கிறோம்.

மாந்தன் தோன்றி வாழ்வதற்கும் படிப்படியாக நாகரிக வளர்ச்சியடைதற்கும் ஏற்ற நானில அமைப்பு, தென்னாட்டிலேயே இன்னும் சிறப்பாகவுள்ளது.

*(தமிழ் இலக்கிய வரலாறு. பக்-1-2. பாவாணர்)*

பாவாணர் தம் வடமொழி வரலாற்றில் (பக்.70-71) மிகச்சிறந்த சொல்லாய்வுகளை வரைந்துள்ளார். அது தமிழ்ச்சொல்லை-வடசொல் எனக் கருதிய தமிழறிஞர்களின் மயக்கறுப்பதாக அமைந்துள்ளது. அத்தோடு அவ்வாய்வு வியக்கவைப்பதாகவும் உள்ளது.

*அந்தி - சந்தி*

உத்து (ஒத்து) - அத்து. அத்துதல் - ஒட்டுதல் - பொருத்தித் தைத்தல்.

அத்து - அந்து - அந்தி. அந்தித்தல் - 1. நெருங்குதல் 2. கூடுதல் - ஒன்று சேர்த்தல்.

இனி, உம் - உந்து - அந்து - அந்தி என்றுமாம். இரவும் பகலும் அல்லது பகலும் இரவும் கலக்கும் இடைவேளையே காலவகையில் அந்தி எனப்பட்டது. காலையில் நிகழ்வது காலை அந்தி என்றும், மாலையில் நிகழ்வது மாலையந்தி என்றும் சொல்லப்பெறும்.

*காலையந்தியும் மாலையந்தியும் (புறம் - 34)*

காலையந்திக்கு முன்னந்தி, வெள்ளந்தி என்றும், மாலையந்திக்குப் பின்னந்தி, செவ்வந்தி என்றும், பெயருண்டு.

அந்தியென்னும் பொதுச்சொல் சிறப்பாக ஆளப் பெறும்போது மாலையந்தியையே குறிக்குமென்பது, அந்திக்கடை, அந்திக்காப்பு, அந்திமல்லிகை, அந்திவண்ணன், அந்திவேளை முதலிய சொல்வழக்கால் அறியப்படும்.

இடவகையில் அந்தி என்பது முத்தெருக்கள் கூடுமிடத்தைக் குறிக்கும்.

பிற்காலத்தில் அந்தி என்னுஞ்சொல் சகர மெய் முன்னிடப்பெற்றுச் சந்தி என்றாயிற்று.

அந்தி அல்லது சந்தி என்னுஞ் சொல் தலைக்கூடுதற் பொருளில் பண்டை இலக்கியத்தில் அருகியே வழங்கியமையாலும், சொற்புணர்ச்சியைக் குறிக்கச் சந்தி என்னும் சொல் வடமொழியிலேயே ஆளப்பெறுவதாலும், தமிழ்ப்பற்றுள்ள பெரும்புலவரும் சந்தி என்பது வடசொல்லென்றே மயங்கி வருகின்றனர்.

ஆயின் ஆய்ந்து பார்க்குங்கால், இதன் தென்சொல் மூலம் வெளிப்படுவது வியக்கத்தக்கதாயிருக்கின்றது. இன்னும், வடவர் காட்டும் வரலாற்றையும் விளக்கிச் செல்வது பாவாணரின் வடமொழியாற்றலை நன்குணர்த்துகின்றது. பாவாணரின் சொல் லாய்வுகளை, விரிவான அவர் நூல்களில் கண்டு உணர்ந்து கொள்வதே சிறப்பாகும்.

இஞ்சிவேர் - ச்ருங்கவேர என்று வடமொழியர் கூறுவர். அக்கூற்றைப் பாவாணர் மறுப்பது தமிழ்மானம் காப்பதாகும்.

'இஞ்சி' என்பது தொன்றுதொட்டுத் தமிழ்நாட்டில் விளைந்துவரும் மருந்துப்பூண்டு.

*செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக்*
*காயங் கொண்டன இஞ்சி. (மலைபடு-125-6)*

*முஞ்சீவி விராய பைந்தார் பூட்டி (பதிற்றுப்-42-10)*

*மஞ்சளும் இஞ்சியும் மயங்கரில் வலயத்து (சிலப்.10.74)*

இஞ்சுதல் - நீரை உள்ளிழுத்தல். இஞ்சு - இஞ்சி. இஞ்சி காய்ந்தால் சுக்கு. சுக்கு - நீர்வற்றியது. சுள் - சுட்டு - சுக்கு. இஞ்சி - சுக்கு.

இஞ்சியை, இஞ்சிவேர், இஞ்சிக்கிழங்கு, இஞ்சிப்பாவை என்று சொல்வது வழக்கம்.

இஞ்சி, கிறித்துவிற்கு முற்பட்ட பண்டைக் காலத்திலேயே, இங்கிருந்து மேனாடுகட்கு ஏற்றுமதியான பொருள்களுள் ஒன்றாம்.

மேலையாரியச் சொற்களெல்லாம் இஞ்சிவேர் என்னும் தமிழ்வடிவைப் பெரிதும் ஒத்திருக்கின்றன. அவற்றை வழங்குவோரும் அவற்றைத் தமிழ்ச்சொல்லின் திரிபென ஒத்துக்கொள்வர்.

வேதமோதுவது தவிர வேறொன்றுந் தெரியாத வடமொழியாளரோ இஞ்சிவேர் என்பதைச் ச்ருங்கவேர் எனத்திரித்து, மான்கொம்பு போன்ற வடிவினது என்று வலிந்தும் நலிந்தும் பொருள்கூறி, அதை வடசொல்லாகக் காட்ட முயல்வர்.

*(தமிழ் இலக்கிய வரலாறு பக் - 87-88).*

| | |
|---|---|
| மலையாளம் | - இஞ்சி, |
| குடகு | - இஞ்சி, |
| கோத்தம் | - இஞ்சி, |

| | |
|---|---|
| பர்சி | - சிங்கிவேர; |
| இலத்தீன் | - Zingiber; |
| கிரேக்கம் | - Zingiberis; |
| பழைய இலத்தீன் | - gingiber; |
| பழைய ஆங்கிலம் | - gingiber |
| ஆங்கிலம் | - ginger, |
| சமற்கிருதம் | - Srungavera |

'இஞ்சி' என்னும் சொல் பலமொழிகளிலும் எப்படி வழங்கப்படுகிறது என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார்.

இதுபோல் பல நூற்றுக்கணக்கான சொற்களை எடுத்துக்காட்டி விளக்கித் தம் ஆய்வு உரைகல்லில் தேய்த்து, உண்மை நிலையை உரைத்துள்ளார்.

இச்சில எடுத்துக் காட்டுகளைக் கற்றாலே பாவாணரின் நுண்மாண் நுழைபுலமும், பன்மொழிப் பயிற்சியும், அயரா உழைப்பும் அறியலாம்.

பாவாணர் தமக்காக ஒரு கொள்கையை வகுத்துக் கொள்ளவில்லை; தம் பெருமையை நிலை நாட்டிக்கொள்ளவும் வாழவில்லை. தமக்காக மட்டும் கட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளவில்லை.

பாவாணர் வேற்று நாட்டிற்பிறந்து வாழ்ந்திருப்பாரானால் அவருடைய ஆய்வுகளை உலகமே வியந்து மதித்திருக்கும்.

பாவாணர் கொள்கைகள் தமிழை உயர்த்தவும், வாழ்விக்கவும் தாமே! அவருடைய அறிவுப் பேராற்றலைப் போற்றி மகிழ்வது தமிழர்தம் கடமையாக இருக்கவேண்டும்.

தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடுவர்கள், பாவாணர் நூல்களைக் கற்றாலே போதும்; பாவாணரைப் போல் கொள்கை மாறாமல் வாழ்ந்தால் போதும்; எதையும் எதிர்பாராமல் ஓர் இயக்கமாக வாழ்ந்தால் போதும்.

வரலாறில்லாமல் வாழ்ந்த தமிழர்க்கு நிலையான வரலாற்றை உருவாக்கிச் சென்றவர்; தமிழர் பெருமையை உலகம் பாராட்டும் படியாக ஒரு தனிவழியை அமைத்துச் சென்றவர்; தமிழர்கள் உலகில் ஒரு பெருமைபடைத்த சிறந்த இனம் என்பதைத் தம் ஆய்வுத் திறத்தால் நிறுவிச் சென்றவர், பாவாணர்.

# 10. தன்னுரிமைத் தமிழர் பாவாணர்

பாவாணர் பழந்தமிழர் வாழ்வியல் முறைகளைப் பெரிதும் விரும்பினார். பழந்தமிழர் வாழ்க்கை முறை மிகவும் திருந்திய; செம்மையான, தூய வாழ்க்கை முறையாகும். சாதிமத வேறுபாடுகளற்ற மிகச் சிறந்த வாழ்க்கைமுறை.

உலகில் பல்வேறு நிலப்பகுதியில் பழமையானதாகக் கருதப்பட்டும் பெருமையாகப் பேசப்பட்டும் வருகின்ற நாகரிகங்களுள் மிகச் சிறந்த நாகரிகம் தமிழர் நாகரிகம். பண்பட்ட நாகரிகமும் பழந்தமிழர் நாகரிகமே; ஆரியக் கலப்பற்ற நாகரிகமும், பழந்தமிழர் நாகரிகமே!

பாவாணர்க்கு இறைப்பற்று உண்டு. அப்பற்று கண்மூடித்தனமான பற்றன்று. பாவாணரின் முன்னோர்கள் கிறித்துவர்களாக மாறியிருந்த போதிலும் பாவாணர் தமிழராகவே வாழ்ந்தார். அவர் கிறித்துவக் கீர்த்தனங்கள் எழுதியிருந்த போதிலும் தன்மானமுள்ள தமிழனாகவே வாழ்ந்தார். தமிழ்ப் பண்பாடுகளுள்ள தமிழனாகவே வாழ்ந்தார்.

அவர் ஆதாம் ஏவாள் கதையை நம்பவில்லை. மாலியமும், சிவனியமும் தமிழ் மதங்கள் என்று தமது ஆய்வால் நிறுவியுள்ளார். மறைமலை அடிகளாரும் கண்ணனைத் தமிழனாகவே காட்டியுள்ளார். ஆரியத் தொன்மங்களை அறவே வெறுத்துள்ளார்.

பாவாணர், தமிழின முன்னேற்றத்திற்காக வாழ்ந்த தந்தை பெரியார் மீது மிகுந்த பற்றுள்ளவர். தந்தை பெரியாரும் மறைமலையடிகளார் மீதும், பாவாணர் மீதும் அன்புடையராகவே இருந்தார். பாவாணர் எண்ணங்கள் தமிழர் முன்னேற்றத்திலும் வளர்ச்சியிலும் நிலைத்து நின்றன.

பாவாணர் தம்முடைய சாதி மதம் பற்றிப் பேசுவதில்லை.

பாவாணர் கடிதம் - இரா. இளங்குமரன் பக். 101இல். இன்று வழக்கில் இருக்கும் பிறப்புப் பற்றிய குலவேறுபாடு ஆரியரால் புகுத்தப்பட்டது. இதைத் தமிழ்மறையாகிய திருக்குறளும் சிவமறையாகிய திருமந்திரமும் கண்டிக்கின்றன. மறைமலை அடிகளும், 'சாதி வித்தியாசமும் போலிச்சைவரும்' என்று நூலெழுதினார்.

பக்கம் 102இல் பகுத்தறிவிற்குப் பொருந்தாத ஆயிரத்தெட்டுக் குலங்களாகத் தமிழர் இனம் பிரிந்து சின்ன பின்னமாகச் சிதைந்து வலியற்று ஆரியராலும் அயலாராலும் நலிவுண்டு கிடப்பதாலும் மேலும் நலிவுறுத்த இந்தி வந்து

கொண்டிருப்பதனாலும் வேற்றுமைகளையெல்லாம் விலக்கித் தமிழரையெல்லாம் ஒன்றுபடுத்தி மீண்டும் ஒருநாட்டினமாக (Nations) அமைப்பதே தக்கதாம் என்று தம் உயரிய கருத்தைக் கூறியுள்ளார்.

பாவாணர் தம்மைப்பற்றிக் கூறும்போது (பக்கம். 104இல்) "நான் விடுதலை கண்ட தன்னுரிமைத் தமிழனாகலின் பிறப்பொடு தொடர்புற்ற ஆரியக் குலப்பிரிவினைக் கட்டிற்கு அடங்கியவன் அல்லேன்" என்றும் கூறியுள்ளார்.

சாதி மத வேற்றுமைகள் அகன்று தமிழர் என்னும் உணர்வோடு தமிழர்கள் ஒன்றுபட்டால்தான் தமிழும் தமிழ்க் குமுகாயமும் நன்னிலை எய்தும் என்ற உயரிய, உறுதியான அவரது கருத்து நமக்குக் கிட்டுகின்றது.

மறைமலையடிகளார் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் மிகுந்த புலமையுள்ளவர். ஆரிய மறைகளை நன்கறிந்தவர்; பழந்தமிழரின், பழக்கவழக்கம், பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றை ஆரியத்தினின்று பிரித்தறிந்து உணர்ந்தவர்; சாதி வேற்றுமைகளைச் சாடியவர்.

பாவாணரும் அவரைப் போலவே, ஆரியத்தினின்று தமிழை மீட்கவும், தமிழர் பண்பாட்டை, கலையை, நாகரிகத்தை பிரித்தறிந்து உணர்ந்து தெளிவித்தவர். ஆரியர் அவிழ்த்துவிட்ட சாதி மதக் கடவுட் கோட்பாடுகளைத் தகர்த்தெறியப் பாடுபட்டவர் தந்தை பெரியார்.

முப்பேரறிவுக் கடல்களாக விளங்கும், மறைமலையடிகளாரையும், தந்தை பெரியாரையும், பாவாணரையும் தமிழகம் கண்டிருந்தும் இன்னும் தன்மானம் அற்றும், பகுத்தறிவற்றும், தாய்மொழி உணர்வற்றும் தமிழினம் வாழ்ந்து வருவது வருந்துதற்குரிய வொன்றாகும்.

மிகச் சிறப்பாக வாழ்ந்த ஒரு பேரினம் தமிழினம். அது ஆரிய நுழைவால் மூடப்பழக்க வழக்கங்களில் மூழ்கி வீழ்ந்தது எனலாம்; ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே மிகப் பெரியதொரு பொருளியல் சுரண்டலுக்குத் தமிழினம் ஆட்பட்டு அழிந்தொழிந்தது என்றும் கூறலாம். அதனைத் தமிழ் மாமன்னர்கள் கோடி கோடியாக வாரிவாரி வழங்கிய பொற்கொடைகளால் அறிந்துகொள்ளலாம்.

பாவாணர் வீழ்ச்சியுற்ற தமிழின வரலாற்றுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டியவர். மூடப்பழக்க வழக்கங்களை அறவே வெறுத்தவர்.

கணியம் (சோதிடம்) ஒரு கலை; அதை முழுமையாக நம்பி வாழ்வை இழப்பது அறியாமை.

கணியர்க்குத் தம் வாழ்வும் காலத்தையே கணிக்கவியலாதே! பிறர் வாழ்வை எங்ஙனங் கணிக்கவியலும்? கணியர்க்குப் பிழைப்பு நடப்பது தவிரக் கணியத்தால் யாதொரு பயனுமில்லை என்று உறுதியாகப் பாவாணர் கூறியுள்ளார்.

*(மண்ணில் விண் - பக். 142)*

நாளும் பொழுதும் பார்ப்பதுகூட நன்றன்று என்றும் நவிலுகின்றார். அதற்கொரு சான்றும் கூறியுள்ளார்.

ஓர் அலுவலகத் தலைவராயிருந்த துரை, தம்மிடம் வேலைக்கு வேண்டுகோள் விடுத்த இளைஞனை, ஒரு திங்கட்கிழமை காலை 8 மணிக்குத் தம்மை வந்து பார்க்கச் சொல்லியிருந்தார். அவன் இராகு காலம் கழித்து 9 மணிக்கு மேற்சென்று பார்த்தான். அவன் சினத்தோடு துரத்தப்பட்டான்.

திருஞான சம்பந்தர், மங்கையர்க் கரசியாரின் வேண்டுகோட் கிணங்கிச் சமணரையடக்க மதுரைக்குப் புறப்பட்டபோது, இன்று செவ்வாய்க்கிழமை யாதலாற் செல்ல வேண்டாமென்று திருநாவுக்கரசர் தடுத்தார். ஆயின் சம்பந்தர், அங்குச் சென்று சமணரை அடக்கி வெற்றி கண்டார்.

வீட்டு வாசலைக் குட்டையாக வைத்து முட்டிக் கொண்டு, வாசல் தட்டிவிட்டதென்றும், வீட்டில் வளர்க்கப்படும் பூனை வெளியே வரின் பூனை குறுக்கிட்டதென்றும், வினைத் தடை யென்று மனந்தளர்வதும், மூவர் போன கருமம் மூதேவியடையும் என்பதும் மூடநம்பிக்கையே என்றும் கூறியுள்ளார்.

அற்றைத் தமிழர் வாழ்வும் இற்றைத் தமிழர் வாழ்வும், பெருமளவில், மதம், கோவில், கடவுள்

தொடர்பான நிகழ்ச்சிகளை அடிப்படையாக வைத்தே இயங்கி வருகின்றன.

அறிவியல் வளர்ச்சி பெற்ற இற்றை நாளிலும் மக்கள், கணியம், எண் காரியம், பெயர் மாற்றம், எழுத்து மாற்றம், கையெழுத்து மாற்றம், ஓரைக் கற்பயன்கள் (இராசிகள்) போன்றவற்றில் மிகுந்த நாட்டம் கொண்டு இயங்கி வருவது அறியாமையையே காட்டுவதாகும்.

கடைக்கழகக் காலத்தில், பழங்குடிப் பேதைமை, மதப்பித்தம், கொடைமடம் என்னும் முக் குற்றமும் ஒருங்கு கொண்ட மூவேந்தரும் பகுத்தறிவைப் பயன்படுத்தாது பிராமணரை முற்றும் பின்பற்றியதனால் கடைக்கழகக் காலத்தில் மதவியல், குமுகாயவியல் மொழியியல் என்னும் முத்துறையிலும் ஆரியம் மிக வேரூன்றிவிட்டது. என்பதைப் பாவாணர் மிகத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

(தமிழர் வரலாறு - பக். 248)

நோயால் இறந்த அரசருடம்பைப் பிராமணன் தருப்பையிற் கிடத்தி வாளால் வெட்டி, அவருயிரை விண்ணுலகத்திற்கேற்றும் 'வாள்போழ்ந் தடக்கலும்', பாலைக் கௌதமனார், பத்துப் பெருவேள்வி வேட்டுப் பத்தாம் வேள்வி வேட்கையால், தம் மனைவியாருடன் விண்ணுலகடைந்தாரென்பதும், பாண்டியன் அரசியற் பணியாளர் வார்த்திகனைச்

சிறையிலடைத்தவுடன் காளிகோயிற் கதவம் தானே சாத்திக்கொண்டதென்பதும் துணிச்சலான ஏமாற்று வினைகளாம்.

*(தமிழர் வரலாறு - பக். 249)*

தமிழ்வேந்தரின் பொற்செல்வப் பெருக்கையும் ஏமாளித் தன்மையையுங் கண்ட பிராமணர், அவரிடமிருந்து இயன்ற வரை பொன்னும் நிலமும் பறிக்கத் திட்டமிட்டுப் பதினாறு தானங்கள் வகுத்துள்ளனர். அவை யாவன:

1. க துலாபுருட தானம் - ஆள்நிறைப் பொற்கொடை
2. உ இரணிய கருப்பதானம் - பொற்கருப்பைக் கொடை
3. ஙு பிரமாண்ட தானம் - பொன் நிலவுருண்டைக் கொடை
4. ச கல்பபாத தானம் - விண்மரப் பொற்கொடை.
5. ரு கோசகசிரம் - ஆயிரம் ஆக் கொடை.
6. சா இரணிய காமதேனு தானம் - பொன் ஆக் கொடை.
7. எ இரணியாசு வரத தானம் - பொற்குதிரைக் கொடை.
8. அ ஏமாத்திரத தானம் - பொன் யானைத் தேர்க்கொடை.

9. பஞ்சலாங்குல பூதானம் - ஐ பேர் நிலக்கொடை.

10. தரா தானம் - பொன் நிலக்கொடை

11. விசுவ சக்கர தானம் - வியனுலகாழிப் பொற்கொடை.

12. மகா கல்ப லதா தானம் - பெருவிண்கொடிப் பொற்கொடை.

13. சப்த சாகர தானம் - எழுகடற் கொடை

14 மகா பூதகட தானம் - ஐம்பூதப் பொற்சலக்கொடை.

இவற்றுள், விண்மரப் பொற்கொடை ஒரு குதிரை வேள்விக்குச் சமம் என்றும், பொற்குதிரை, தேர்க்கொடையால் தீவினை யனைத்தும் நீங்குமென்றும், சொல்லப்பட்டது.

இவைபற்றியெல்லாம் பாவாணர் மிக விரிவாகத் தம் நூலில் காட்டிச் செல்லுகின்றார்.

மூவேந்தர்க்குள்ளும், ஓரளவு ஒற்றுமையிருந்த கடைக்கழகக் காலம்வரை, அயலார் தமிழ்நாட்டைக் கைப்பற்ற முடியவில்லை. அதன் பின்னரே, ஒன்றன்பின் ஒன்றாகப் பல அயலாட்சிகள் தோன்றி, மூவேந்தரும் மறைந்தனர். அன்று மூவேந்தர் ஒற்றுமையைக் குலைத்த ஏதின்மாக்கள் கூட்டம், இன்றும் தமிழரிடையிருந்து ஒற்றுமையைக் குலைத்து வருகின்றது.

(தமிழர் வரலாறு - பக். 257)

பலதுறைகளிலும் சிறப்புற்று வாழ்ந்திருந்த தமிழர் கடைக்கழகக் காலத்தில் ஏற்பட்ட மிகப் பெரியதொரு பண்பாட்டழிவால் சிக்கிச் சீரழிந்த வரலாற்றைப் பாவாணர் மிகத் தெளிவாக விளக்கிக்கொண்டு செல்லுகின்றார்.

பாவாணர் தமிழர் எழுச்சிக்கும் விழிப்புணர்ச்சிக்கும் தெள்ளத்தெளிவாகப் பலப்பல உண்மைகளை எடுத்துக்காட்டியுள்ளார். தம் நுண்மாண் நுழைபுலத்தால், ஆய்வு நோக்கால், ஐயாயிரம் ஆண்டுக்கால தமிழரின் பொற்கால வரலாறு, மூவாயிர ஆண்டுக்கால ஆரியக் கலப்பில் அலைக்கழிக்கப் பட்டதை அருமையாக எடுத்துக் காட்டியுள்ளார்.

பாவாணர் மறைவுக்குப் பின்னர் நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் கால கட்டத்தை உற்று நோக்கிப் பாருங்கள். எந்த அளவு தமிழினம் இழிந்து போயுள்ளதென்று தெளிவாக அறியலாம்.

அரசியல், மொழியியல், மதவியல், குமுகாயவியல் ஆகியவற்றில் எந்த அளவில் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன என்பவற்றையும் தெளிந்து கொள்ளலாம்.

தமிழர் இன்னும் விழிப்புணர்ச்சியின்றி இருந்தால், ஆங்கிலச் சூறையில் பறந்து போய்விடுவர் என்பது உறுதியாகும்.

விழிப்பைத் தருவது பாவாணர் நூல்கள்.

தமிழரையும், தமிழர் பண்பாட்டையும் காப்பது பாவாணர் நூல்கள்,

தமிழர்க்கு எழுச்சியூட்டுவதும் பாவாணர் நூல்களே!

பாவாணர் நூல்களைப் படித்துணர்தல் தமிழர் கடனே!

# 11. எரிமலைத் தமிழன்

உடலும் உயிரும் போலத் தமிழும் தாமுமாக வாழ்ந்த உண்மைத் தமிழ்ப் பேரறிஞர் பாவாணர் உண்மை உழைப்பு. உயர் தமிழ்ப்பற்று அவரிடம் இருந்தன.

ஆங்கிலப் பேராசிரியராக ஆகவேண்டுமென்று அவாவிய அவரது உள்ளம் அருந்தமிழிலே வேரூன்றி அதன் வாழ்வுக்கே தம் வாழ்வை எருவாக்கிப் போனார் பாவாணர்.

தமிழறிஞர்கள் தமிழ்ப் புரட்சி செய்வார்கள் அறிவுப் புரட்சி செய்வார்கள். அப்புரட்சிகள் தமக்காக அன்று; தமிழுக்கும் தமிழ்நாட்டுக்குமே ஆகும். அறிவுப் புரட்சியால் யாரும் அசையவில்லையென்றால் வேறெதனால் எப்புரட்சி செய்வது?

பாவாணர் தம் வாழ்வில், பணியேற்றது முதல், சொல்லாய்வு நிலை, இயக்கநிலை, அகரமுதலி நிலை ஆகிய மூன்று நிலைகளில் முழு மூச்சாக உழைத்தார்.

அவர்க்கும், அவர் நூல் வெளியீடுகளுக்கும் அவரை முன்னேற்றவும் பலர் ஒத்துழைப்பட நல்கியுள்ளனர்.

பாவலரேறு பெருஞ்சித்திரனார் உலகளவில் அவருடைய ஆய்வுகள் செல்லவேண்டுமென்று தென்மொழி இதழ் வாயிலாகப் பெரும் பணிகள் புரிந்துள்ளார்.

இயன்றவரை அவருடைய ஆய்வுகள், கொள்கைகள், யாவும் தமிழர்கள் கைக்கொண்டு வாழ்ந்தால் அதுவே தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிவதாகும்.

பாவாணர் வாழ்வியலைக் கண்டபிறகாவது தமிழ்மக்கள், தமிழ் வளர்ச்சிக்காகத், தமிழாட்சிக்காக வாழட்டும். எழுதுபவர்கள் எழுதுக! ஆய்வு புரிபவர்கள் புரிக! அன்னைத் தமிழை ஆட்சியில் அமரவைக்க அனைவரும் திரள்க! அதற்குப் பாவாணர் நூல்கள் வழிகாட்டும்.

1966ஆம் ஆண்டு கோலாலம்பூரில் முதல் உலகத்தமிழ் மாநாடு நடைபெற்றபோது பாவாணர் புறக்கணிக்கப்பட்டார்.

1968ஆம் ஆண்டு சென்னையில் இரண்டாம் உலகத்தமிழ் மாநாடு நடைபெற்றபோதும் பாவாணர் கலந்து கொள்ளவில்லை. விழாவின் இறுதிநாளின்போது பூம்புகார்த்திடலில், பாவாணர் மேடைக்கு அழைக்கப்பட்டுப் பேரறிஞர் அண்ணாவால் பொன்னாடை போர்த்தப்பட்டுச் சிறப்பிக்கப்பட்டார்.

1970ஆம் ஆண்டு பாரிசிலும், 1974ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்திலும் நடைபெற்ற உலகத்தமிழ்

மாநாடுகளிலும் பாவாணர் கலந்து கொள்ளும் வாய்ப்பு பெறவில்லை.

> ''யாம் 'துரையண்ணன்' என்று சொல்ல விரும்பும் அண்ணாத்துரை இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டில் எமக்கு இடம் தந்தாலும் அதிலே எனக்கு ஒரு வரம்பிடப்பட்டிருந்தது. கட்டுரை எழுதுவார் கவனிக்கவேண்டிய நெறிமுறைகளில் ஒன்று 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்றது போலத் தமது உயர்பொதுக் கொள்கையைத்தான் தழுவல் வேண்டும்;
>
> 'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்தகுடி' என்று உயர்வு நவிற்சியும் தற்புகழ்ச்சியும் கருதி உண்மை அறிவியலுக்கும் மாறான உலக அறிஞர்கள் ஒப்புக் கொள்ளாத கொள்கைகளையெல்லாம் விட்டுவிட வேண்டும் என்றிருந்தது. யாம் பேருக்கு மட்டும் அவருடைய (துரையண்ணனாரின்) கட்டளைக்கிணங்கி ஒரு கட்டுரை எழுதிவிடுத்துவிட்டு மாநாட்டில் கலந்துகொள்ளவில்லை.''

என்று மதுரையில் நடந்த ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டு உரையில் கூறியுள்ளார்.

திருப்பனந்தாள் மடத் தலைவராக திருத்தவத்திருச் சுவாமிநாதத் தம்பிரான் அவர்கள்

இருந்த காலத்தில் அவரிடம் சென்று தமது தமிழாராய்ச்சி நூல்களை வெளியிட உதவி வேண்டினார் குருபூசை நாளன்று வரச்சொன்னார்கள்.

குருபூசை நாளன்று பெரும் பேராசிரியரும் (உ.வே.சா) வந்திருந்தார். அவர்களைப்பற்றித் தெரியுமா? என்று தம்பிரான் கேட்டார். பாவாணர் தெரியும் என்றார். ஐயரோ நினைவில்லை என்றார். உடனே தம்பிரான் அப்பாற் சென்றுவிட்டார்.

> 'எத்தனையோ ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் வெளியிட்ட பின்பும், தமிழை வளர்ப்பதாகச் சொல்லிக்கொள்ளும் தி.மு.க. அரசும், வெவ்வேறு நிலைமையிலுள்ள தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களும், என் ஆராய்ச்சியைப் போற்றாதபோது, நிலத்தேவர் காவலிலுள்ள ஒரு நிறுவனம் எங்ஙனம் போற்றும்? அதை எதிர்பார்ப்பது எட்டாக்கனிக்குக் கொட்டாவி விடுவதே'

என்று பாவாணர் வருந்தினார்.

அப்போது அங்கு இடப்படும் உணவு முதலில் பிராமணர்க்குத் தாம். அதிலும் அவர்களை உட்புறத்தில் அமரவைத்து உணவிடுவார்கள். மற்றவர்க்கு பிற்பகல் மூன்று மணிக்குத்தான். அப்போதுதான் பிராமணப்பந்தி முடிந்தது.

> பாவணரோ, எனக்கு மடத்துப் பொருளுதவி தம்பியது பற்றி எள்ளளவும் வருத்தமில்லை.

> தமிழர் குமுகாய நிலைத்தாழ்வே என்னை மிகமிகப் புண்படுத்தியது. நாடு தமிழ்நாடு; மடம் தமிழன் மடம்; மதம் தமிழன் மதம்; பணம் தமிழன் பணம். அங்ஙனமிருந்தும் தமிழன் நாய்போல் நடத்தப்படுவது இவ்விருபதாம் நூற்றாண்டிலும் தொடர்கின்றதெனின் இற்றைத் தமிழன் உயர்திணையைச் சேர்ந்தவனல்லன் என்பது தெள்ளத்தெளிவாம்''

என்று கூறியுள்ளார்.

*தமிழர் மதம் - பக் - 133.*

பாவாணர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மேற்கொள்ளவிருக்கும் பணியை மேற்பார்வையிட ஒரு குழு அமைக்கப்பட்டது. அக்குழுவின் தலைவர். பேராசிரியர் பண்டாரகர் சுனீதி குமார். அண்ணாமலைப் பல்கலைக்கழக சட்டர்சி என்பவர் அமர்த்தப்பட்டார். அவருக்குத் தமிழ் தெரியாது. தமிழை ஆங்கிலத்திலே படித்தவர். தமிழுக்கு மாறானவர்; எல்லாம் வடமொழியிலிருந்து வந்தவை என்று கூறுபவர்.

தமிழில் பெண்பால் காட்டும் ஈறு வடமொழி வருமுன் இல்லையாம். ஸ்திரி என்னும் பெயர் வண்ணான், தட்டான் முதலிய பெயர்களோடு சேர்ந்து வண்ணான் + ஸ்திரி = வண்ணாத்தி தட்டான் + ஸ்திரி = தட்டாத்தி என்று ஆனதாம்.

பாவாணரின், அச்சன் என்பது அத்தன் என்னும் தென்சொல்லின் திரிபென்பதையும், குமரிக்கண்ட வரலாற்றையும் சட்டர்சி மறுத்துள்ளார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலிக்காக அளித்த 50 சொற்களடங்கிய போலிகையையும் மறுத்துள்ளார். பாவாணர்பால், இலெ-ப-கரு. இராமநாதன் அவர்களும், கருத்து வேறுபாட்டிற்கு இடமில்லாவகையில் மறுபடியும் 50 சொற்கள் எழுதித் தருமாறும் கேட்டுள்ளார்.

"தமிழைப்பற்றிய உண்மையை எடுத்துச் சொல்ல ஏன் அஞ்சவேண்டும்? இங்ஙனம் எத்தனை நாளைக்கு அஞ்சியஞ்சி அடிமைத்தனத்திலும் அறியாமையிலும் தமிழன் மூழ்கிக் கிடப்பது?" என்று பாவாணர் கொதிப்படைந்தார்.

என்ன தீங்குநேரினும் உண்மையை எடுத்துச்சொல்வது ஆராய்ச்சியாளர் கடமை என்றும், மிகக்கொடுமையாய் வடமொழிக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழை அதனின்றும் மீட்பதே என் வாழ்க்கைக் குறிக்கோள் என்றும், இதற்காகவே என்னை இறைவன் படைத்தான் என்றும் பாவாண்ர் கூறிவந்துள்ளார்.

பாவாணர்க்கு பணிநீக்க ஆணையும் வந்தது. நீட்டிப்புக்கேட்டும் பயனில்லை. 23.9.1961 அண்ணாமலை நகரை விட்டு வெளியேறினார். மிகப்பெரிய ஆய்வறிஞர் பாவாணர். அவரால் தமிழ்மொழி நன்னிலை அடையவேண்டும்.

வறுமையோடு போராடிக் கொண்டிருக்கும் பாவாணர் ஆய்வுப்பணிகளையும் செய்தல் வேண்டும். ஆற்றல் இருந்தும் பயன்படுத்தப்படாமல் வீணாகிப்போவது வருந்துதற் கொன்றாகும்.

1956இல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்தற்கென்றே நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அமர்த்தப்பட்டேன். எனினும் பர் (Dr) சேதுப்பிள்ளையும், பர் (Dr) மீனாட்சி சுந்தரனாரும் என்னைத் தடுத்து விட்டதனால் அப்பணி கெட்டது. அவரும் அப்பணியைச் செய்தாரில்லை.

தமிழ் வளர்ச்சிக்கென்றே அமைக்கப்பட்டதாகச் சொல்லப்படும் அண்ணாமலைப் பல்கலைக் கழகமும் தமிழைக் கைவிட்டது. தமிழ்ப்பற்றும் நெறிப்பட்ட ஆராய்ச்சியும் இல்லாதவர் தமிழ்த்துறைத் தலைவராக இருப்பதால் நேர்ந்த கேடு இது. என்று பாவாணர் கூறியுள்ளார்.

*மண்ணில் விண் - பக் - 103.*

'என் அண்ணாமலை நகர் வாழ்க்கை' என்று தனிக் கட்டுரையொன்று பாவாணர் எழுதியுள்ளார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலிக்கென்றே பாவாணர் அண்ணாமலை நகர்க்குப் பேராவலோடு சென்றார்; உண்மைத் தமிழ்க் கொள்கையையும், உண்மைத் தமிழ் ஆராய்ச்சியையும் உரைக்கும்போது யாவர்க்கும் முரண்பாடாகிறது. எதிர்ப்பதற்குப் பாவாணர் ஒருவரே அங்கு.

பாவாணர்க்காகப் பாவேந்தரும் பொங்கி எழுந்துள்ளார். புரட்சி விளைத்துள்ளார். உண்மைத் தமிழுள்ளங் கொதிப்புற்றன. பாவலரேறுவும் கொதித்தெழுந்தார். அவ்வல்லாண்மையைப் புல்லாண்மையாய் ஆக்க முடியவில்லையே. ஆள்வார்க்கோ அக்கறையில்லை. ஆளப்படுவார்க்கோ அறியாமை. அடிமைநிலை!

பாவாணர் கொள்கை வேழமாகக் கொதித்தெழுந்தார். குத்தி அடக்குதற்கோ தமிழை எதிர்க்கும் தலைவர்கள் - தமிழ் வேழங்களெல்லாம் அன்று என்ன செய்தனவோ? பாவாணரை நீர்பாய்ச்சி - உரமிட்டு வளர்க்கும் பயிர்போல் காத்திருந்தால், சிறந்த ஆய்வு விளைச்சல்களைத் தமிழகம் கண்டிருக்கும்.

இற்றைநாள் தமிழ் செவ்வியல் மொழியாக வேண்டுமென்று போராடி வருகின்றோம் - பாவாணர் கொள்கைகள் நிறைவேறி இருந்தால், தமிழ் தானே செவ்வியல் மொழியாகியிருக்கும்.

தமிழர்களே தமிழை ஏற்றுப்போற்றிக் காத்து வளர்க்காத இழிநிலை உள்ளபோது தமிழின் நிலை எப்படி, யார், உயர்த்துவது? ஆங்கில வெறி ஒழித்துத் தமிழின்பால் தமிழர்கள் திரும்ப வேண்டும்; அப்போதுதான் பாவாணர் விரும்பிய தமிழ் விடுதலை கிட்டும்.

# 12. தமிழறிஞர் நோக்கில் பாவாணர்

பாவாணர் சாதி, மத, குல, கட்சி, அரசியல் சார்பற்று வாழ்ந்த தமிழ்ப்பேரறிஞர். அவரைத் தமிழ் மூதறிஞர்கள் பலரும் பாராட்டிச் சிறப்பித்துள்ளனர். அவை பின்வருமாறு : -

பண்டித தேவநேயனார் பி.ஓ.எல். பொதுவாக மொழிநூல் ஆய்வுமுறைகளைப் பின்பற்றித் தமிழ்ச்சொல் ஆராய்ச்சி பற்றி எழுதிய நூல்கள் தமிழ்மொழிக்கு நீண்டகாலத் தேவையினை நிறைவு செய்தன.

> எம்முடைய இளந்தைக் காலத்திலே தலைமைக் கண்காணியார் தவத்திரு திரஞ்சு (Trench) எழுதிய சொல்லாராய்ச்சி, பேராசிரியர் மாக்சுமுல்லர் எழுதிய மொழியறிவியல், பேராசிரியர் சாய்சு எழுதிய 'ஒப்பியல் மொழிநூல்' முதலிய ஆங்கில நூல்களை யாமே பெருவிருப்புடன் படித்துக் கொண்டிருக்கும்போது, அந்தமுறையில் தமிழ்ச்சொற்களை ஆராயவேண்டும் என்று விரும்பினேம்.
>
> தமிழ்ப் பேரறிஞர்கட்குப் புலப்படாமல் மறைந்துகிடந்த - விரிவாகவும் வியப்பாகவும் உள்ள தமிழ்மொழியறிவுப் பரப்பு பண்டாரகர் கால்டுவெல் எழுதிய திராவிட மொழிகளின்

ஒப்பியல் ஆய்வு நூலால் புலப்படலாயிற்று. எனினும். பண்டாரகர் கால்டுவெல் அறியப்படாத வட்டாரத்தில் செய்ததொரு முயற்சி யாதலால் தமிழ்ச் சொற்களையெல்லாம் விடாமல் நிறைவாக எடுத்தாராய்ந்துள்ளார் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. இதுவே மொழியியலை ஆராயவேண்டுமென்று எம்மைத்தூண்டியது.

எனவே ஞானசாகரம் (அறிவுக்கடல்) என்னும் எம்முடைய இதழில் முதல் தொகுதியில் அத்துறையில் ஒன்றிரண்டு கட்டுரைகளை எழுதி வெளியிட்டேம். ஆனால் அப்போது சமயம், மெய்ப்பொருளியல் இலக்கிய வரலாறு ஆகிய துறைகளில் எம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்தவேண்டி ஏற்பட்டமையால் மொழியாராய்ச்சித் துறையில் தொடர்ந்து ஈடுபடக் கூடவில்லை.

ஆயினும் தகுதியுடைய அறிஞர் யாராவது இத்துறையில் ஆராய்வதற்கு முன்வரக்கூடுமா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேம். அப்போது யாழ்ப்பாணம் திருத்தந்தை ஞானப்பிரகாசர் தாம் எழுதிய மொழியியல் ஆராய்ச்சி நூலை எமக்கு அனுப்பிவைத்தார். அது ஓரளவு எமக்கு மனநிறைவு அளித்தது.

எனினும் மொழியியல் ஆராய்ச்சித் துறை மிகவும் விரிவும் ஆழமுடையதாதலால்

பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவற்றைக்கொண்டு நன்கு புரிந்துகொள்ளும் வகையில் மேலும் மொழியியல் ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதல் வேண்டுமென்று கருதினோம். அந்த நேரத்தில் திரு. தேவநேயனார் யாம் எதிர்பார்த்ததை ஏறத்தாழ முற்றும் நிறைவேற்றியது கண்டு பெருமகிழ்வுற்றேம். அத்துறையில் அவர் மிகவும் உழைப்பெடுத்து ஆராய்ந்து எழுதியிருப்பவற்றைத் தமிழ் அறிஞர்கள் நன்றாக நம்பலாம்.

சொல்லாராய்ச்சித் துறையில் திரு தேவநேயனார் ஒப்பற்ற தனித்திறமையுடையவர் என்றும், அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே கருதுகின்றேம்.

*மறைமலையடிகளின் சான்றிதழ். 1949*
*ஒப்பியன் மொழிநூல் - முன்னுரை. பக். 5.*

'Transistor' என்ற சொல்லுக்குத் திரிதடையம் போன்ற சொற்கள் வழங்கத் தலைப்பட்டிருந்த காலம். விடியற்காலை நான்கு மணிக்குக் கடலூர் ஆற்றுக்குச் சென்றுவரும்போது கேட்டேன். ஐயா. 'Transistor' என்ற சொல்லுக்குச் சரியான தமிழ்ச்சொல் எது என்று ஒரு நொடியும் தாழ்த்தமின்றி Transfer + Resistor = Transistor. மாற்றெதிர்ப்பான் என்று கூறினார்கள்.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியின் சீர்கேடுகள் என்ற நூலைப் படித்தபோது பாவாணர்

ஐயா மேல் ஏற்பட்ட பெருமிதம் பல மடங்கு அந்த நேரத்தில் பெருகியது என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

*(7.2.2001) தமிழியக்கம் - பக் - 17.*
*சிங்கைப்பாவலர் - முல்லைவாணன்.*

பாவாணர் மொழித்துறையில் கிட்டத்தட்ட தமிழகம் பெற்றெடுத்த ஒரே ஓர் அறிஞர் என்று கூறத்தக்கவராயுள்ளார். அவருடன் பக்கத்திலோ, சற்றுத் தொலைவிலோ வைத்து ஒப்பிட, எண்ணக்கூடத் தமிழகம் மொழித்துறையிலே இன்னும் ஓர் அறிஞனைப் பெற்றுத் தரவில்லை அவர் இயந்திர அறிஞர் அல்லர். சோற்றுக்குத் தக்கபடி தாளமிடும் கூலி அறிஞரும் அல்லர்; தமிழினத்தின் உயர்வு உணர்ந்தவர். அதில் பற்று உள்ளவர்; மொழிநூல் கற்றவர் மட்டுமல்ல; மொழிநூல் கற்பிப்பவர்; இயற்றுபவர் மட்டுமல்லர், மொழிநூல் ஆக்கும் சிந்தனை அறிஞர்.

*பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார்*
*தமிழியக்கம். நடை - 2 - பக். 5.*

திரு தேவநேயப் பாவாணரின் மணிவிழா நடப்பதறிந்து பெருமகிழ்ச்சி கொள்கிறேன்.

பாவாணர் தமிழ்மொழிக்கும் நாட்டுக்கும் இடைவிடாத நற்றொண்டாற்றி நம் அனைவரின் நிலையினையும் உயர்த்தியவர்.

அவருடைய புலமை, தெளிவும் துணிவும் மிக்கது. தமிழ்மொழியின் தூய்மையும் வளமும்

எத்தகையது என்பதனை ஆய்ந்தறிந்து தெரிவித்த பெருமகனாரிடம் தமிழிடம் பற்றுக்கொண்ட எவருக்கும் பெருமதிப்பு ஏற்படாதிருக்க முடியாது.

தமிழ்ப்பெரு நூல்கள் தமிழரால் நன்கு கற்று உணரப்பட்டுத் தமிழ்நெறியில் தமிழர் நின்று வென்றிடவேண்டுமென்பதில் தளராத விருப்பம் கொண்டோர்க்கெல்லாம், பாவாணரின் புலமை நம்பிக்கை தந்து வருகிறது.

*பேரறிஞர் அண்ணா.*
*செ.சொ.பி. அகரமுதலி. ஐ. பக். 3*

*வடமொழியும் இந்தியும் மற்றும் வடக்கிற்*
*படுமொழிகள் என்ற பலவும் - தடவியே*
*அந்தமிழே ஆதி யெனுந்தேவ நேயர்தாம்*
*எந்தமிழர் எல்லார்க்கும் வேந்து.*

*- புரட்சிப்பாவேந்தர்.*

*பாவாணர் தமிழின் ஆண்மை வடிவம்*

*- உவமைப்பாவலர் சுரதா.*

இவர் கண்டது தமிழ். கேட்டது தமிழ். உண்டது தமிழ்; உயிர்ப்பது தமிழ். கொண்டது தமிழ்; கொடுப்பது தமிழ்; விண்டது தமிழ். விளக்குவது தமிழ் என்று தமிழே என்பாகவும், தசையாகவும் குருதியாகவும் வாய்க்கப்பெற்ற தமிழின் முழு உருவம் பாவாணர் என்னின் வியப்படையவும் வேண்டா; மிகையென்று -ந்திவிடவும் வேண்டா.

இவரின் அளப்பரிய தமிழாற்றலை முழுவதும் தமிழகம் பயன்படுத்திக் கொள்ளுதல்

வேண்டும். இவர் இதுவரை எழுதிய செந்தமிழ் நூல்கள் இருபத்தைந்து. இன்னும் ஏறத்தாழ முப்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் இவரால் எழுதப்பட வேண்டியிருக்கின்றன. அவை அத்தனை நூல்களும் தமிழ்மொழிக்கு ஏற்றம் உரைப்பன. வீழ்ந்துபட்ட தமிழனுக்கு விழிப்பூட்ட வல்லன. இவர் எழுதவிருக்கும் செந்தமிழ்ச் சொற்பிறப்பிய லகர முதலி ஒருவர் ஒருவராலேயே எழுத வியலும் அரும்பெரும் நூல் ஆகும்.

தமிழை ஆரிய இருளினின்று மீட்டுக்காக்கும் அரிய ஒளி ஞாயிறாகும்.

எத்தனை எத்தனை வகைகளுக்கோ தமிழ் என்னும் பெயரால் இன்று பெருந்தொகை பல்கலைக் கழகங்களாலும் அரசாலும் செலவிடப்பெற்று வருகின்றது. இப் பெருந்தொகையுள் ஒரு சிறு அளவு தொகையை இவர் முயற்சிக்கு ஒதுக்கிக்கொடுத்தாலும், அஃது ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழ்மொழியை மீட்க வல்லது.

மறைமலையடிகளாரால் தோற்று விக்கப்பெற்று இவரால் பேணிக் காக்கப்பெறும் தனித்தமிழியக்கம் செழிப்படைய அடையத்தான் தமிழ்மொழி துலக்கமுற்று விளங்கும். அப்பொழுதுதான் தமிழ் அறிவியல் மொழியாகவும் வாழ்வியல் மொழியாகவும் வளம்பெறும்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலிய தென்மொழி இலக்கணப் புலமையும், சமற்கிருதம், கிரேக்கம், இலத்தீனம், உருது, இந்தி, ஆங்கிலம் முதலிய வடமொழி இலக்கணப் புலமையும் ஒருங்கே கைவரப்பெற்ற மொழியியல் ஞாயிறான இவர், தமிழகத்தை விளங்கிக் கொண்டுள்ள அளவுக்குத் தமிழகம் இவரை விளங்கிக் கொள்ளுமானால், பயன்படுத்திக் கொள்ளுமானால் தமிழுக்கு என்றும் அழிவில்லை; தமிழினத்துக்கும் என்றும் வீழ்ச்சியில்லை.

*தென்மொழி. சுவடி - 15-ஓலை 7.*

பாவாணரின் சொல்லாய்வு ஞானப் பிரகாசருடைய மொழியாய்வுக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டது. ஆனால் அவரினும் களம் விரிந்தது. பாவாணரின் முழு ஆய்வறிவும் வெளிப்படுத்தப் பெறாமலே போயின. சுருக்கமாகச் சொல்வதானால் தமிழ்மொழியாய்வு, சொல்லாய்வு, வேர்ச்சொல் ஆய்வு, பிறமொழி ஒப்பீட்டாய்வு என்னும் பரந்துபட்ட ஆய்வுக் களரியுள் அவர் வெளிப்படுத்திய ஆய்வுக் கருத்துகள் ஒரு முன்னுரையே.

இதுவரையிருந்த தமிழறிஞர்களுள் அவர் ஓர் ஆராய்ச்சிமலை. அவரைப் போல், இதுவரை, தமிழ்மொழிக்காக எவரும் தம்மை முழுமையாக ஒப்புக்கொடுத்ததில்லை. தம்மைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாது தமிழ்பற்றியே நினைந்து நினைந்து வரலாறாகிப் போனவர் அவர். அவரிடம் இருந்த

ஓரிரு குறைகளுள் தலையாயது எல்லாரையும் எளிதில் நம்பிவிடும் குழந்தை உளத்தினர் அவர் என்பதுதான்.

*பாவலரேறு. பெருஞ்சித்திரனாா நேருரைகள்.*
*தென்மொழி. சுவடி 23. ஓலை 4 - பக் - 15*

'தேவநேயப் பாவாணர்' அவர்களின் இயற்பெயர் 'தேவநேசன்' என்பதாகும். அவர் ஒரு கிறித்துவர். முதுகலை படிக்கின்ற வரையிலே அவர் ஆங்கில மொழி ஆராய்ச்சியை எடுத்துப் படிக்கவேண்டும் என்ற எண்ணத்திலேதான் இருந்தார். அக்காலத்தில் 'மறைமலையடிகளாரின்' கொள்கை மாணவராக இருந்து தமிழ்கற்க வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது. அப்பொழுது தமிழ்பற்றி அவர்கூறக் கேட்டபோது... ஓகோ! இப்படிப்பட்ட மொழியா என்று அவர் வியந்தார். உணர்ந்தார். உணர்ந்த உடனே அவர் 'தமிழ்மொழி ஆராய்ச்சியை நான் எடுத்துப் படிப்பேன்' என்று ஆங்கிலமொழி ஆய்வினைக் கைவிட்டுவிட்டுத் தமிழ்மொழி ஆய்விலே ஈடுபட்டார்.

கிட்டத்தட்ட 45 அல்லது 50 ஆண்டுக்காலம், இந்த ஏதுங்கெட்ட தமிழ்மொழியினை ஆராய்ந்தார். ஒரு பெரிய வரலாற்றினை உருவாக்கினார். அவற்றை எல்லாம் உண்மையெனச் சான்று காட்டினார். அது பெரிய செய்தி! இப்படியாக அவர் மேனாட்டு ஆய்வாளர்களுக்கே சூளுரைத்த ஒரு பெரிய அறிஞர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலே அவருக்கு இருந்த பேராசிரியர் பொறுப்பைக்கூட அதற்கு இழுக்கு வந்தபொழுது அப்பதவியே வேண்டா என்று கூறி வெளியே வந்துவிட்ட அறிஞர் அவர். எனக்குப் பெண்டாட்டி இருக்கிறாள். பிள்ளைகள் இருக்கின்றார்கள். அத்துடன் கொஞ்சம் மானமும் இருக்கின்றது என்று சொல்லிவிட்டு வெளியே வந்தார்.

*பாவலர் அ.பு. திருமாலனார் பக். 17*
*தென்மொழி. சுவடி-23.*

பாவாணர் தமது பன்மொழிப் புலமையும் பல்கலைப் பயிற்சியும் தமிழர்க்கும் தமிழுக்கும் தக்கபயன் விளைக்க வேண்டுமெனக் கருதிச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியை ஆக்கியளிக்கப்பெரிதும் கனவுகண்டார். ஆயின் அவர் வாழ்நாளில் அவர் கனவு நனவாகவில்லை.

*முனைவர் சி.இ. மறைமலை*
*தமிழ்ச் சொற்பிறப்பியல் வளர்ச்சி வரலாறு*
*துரை. குணசேகரன். பக். 11.*

# 13. பாவாணர் மேன்மை

பாவாணர் உயர்நிலைக் கல்வி முடித்தார். ஆசிரியப் பணியில் அமர்ந்தார். மேலுங்கற்றுத் தம் நிலையை உயர்த்திக்கொண்டார்.

பாம்பன் சுவாமிகள், மாகறல் கார்த்திகேயனார், ஞானப்பிரகாச அடிகளார், போன்றோரின் மொழி ஆய்வுகள் தொடக்க நிலைப் பணிகளே ஆகும். பாவாணரின் மொழி ஆய்வு பணிகளே நிறைவானதும் செயலாக்கம் பெற்றவையும் ஆகும். நன்கு தோய்ந்தார். மேலைநாட்டு மொழிநூல் அறிஞர்களின் மொழியியல் நுட்பங்களையும் நன்கு உணர்ந்தவர். பன்மொழிகளில் தேர்ச்சி அடைந்தவர்.

ஆரியத்தினின்று தமிழை மீட்க வேர்ச்சொல்லாய்வில் பெரிதும் உழைத்தார். அதையே உயரிய குறிக்கோளாகவும் கொண்டார்.

தமிழனுக்கு வரலாறில்லை என்னும் குறைபாடு தொன்றுதொட்டே இருந்து வந்தது. அக்குறை நீக்கத் தமிழறிஞர் பலரும் முயன்று பற்பல வரலாற்று நூல்களை அளித்தனர். தமிழ் வரலாறுகள் வரத்தொடங்கின. தமிழர் வரலாறுகள், பண்பாடுகள், நாகரிகங்கள், கலைகள் எல்லாம்

வரத்தொடங்கின. தமிழ்நாட்டு வரலாறுகளும் பலரால் எழுதப்பட்டன.

அவற்றையெல்லாம், அறிவியலோடு பொருந்தக் கூடியதாக இல்லையென்றும் சான்றுகளற்றும், கற்பனைக்போக்கும் உடையனவாக உள்ளன என்றும் தள்ளத் தொடங்கினர். தமிழர் வரலாற்றில் இலக்கியச் சான்றுகள், கல்வெட்டுச் சான்றுகள், செப்பேடுகள் இவற்றின் மூலமாகக் கிட்டும் உறுதியான சான்றுகளையும் பொய்யெனத் தள்ளிப் புறம்போயினர் பலர்.

வரலாறற்றவனா தமிழன்? வாழ வழியில்லாதவனா? சொந்த நிலமற்றவனா? வந்தேறியா? எங்கிருந்தோ ஓடிவந்தவனா? எங்கிருந்தோ ஓடிவந்தவன் என்றும் வரலாற்றாசிரியர்கள் சிலர் எழுதியும் உள்ளனர். எழுத்தில்லாதவர்கள் மொழியில்லாதவர்கள், நிலமில்லாதவர்களுக்கு எல்லாம், வரலாற்றில் நிலைத்திருக்கும் முயற்சிக்குப் பலகோடிகள் செலவழிக்கப்பட்டு வருகின்றன. தமிழன்தான் இன்று ஏதிலியா?

பாவாணர், உலகளவில் தமிழனுக்குப் பெருமைசேர்க்கும் அளவிலும், உலகம் ஒப்பும் அளவிலும், தமிழ் வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழர் வரலாறு, வடமொழி வரலாறு போன்ற நூல்களை வெளியிட்டுத் தமிழனை எந்தக்

கோடியிலிருந்தும் எவனும் அசைக்கமுடியாத அளவுக்கு முடிந்த முடிபாக ஆணி அறைந்தாற்போலத் தமிழன் வரலாற்றுச் சுவடுகளைத் தந்து சென்றுள்ளார். இனி ஒரு வரலாறு தமிழனுக்குத் தேவையில்லை. பாவாணர் கருத்துகளே சாலச்சிறந்தது. எல்லாரும் ஏற்றுக் கொள்ள கூடியதும் ஆகும்.

பாவாணர் மாந்தனூல் கற்றறிந்தவர். தமிழன் பிறந்தகம் குமரிக்கண்டம் என்று தெளிவுபடக் கூறியுள்ளார். இதைவிட வேறு ஆய்வுகள் இனி என்ன செய்யவேண்டும்? தமிழ் வளர்ச்சிக்கென்று வேறு ஏதாவது செய்ய நினைத்தால் பாவாணரினும் மேம்பட்ட அறிவுத் திறத்தோடு தமிழர்களுக்குப் பயனளிக்கும் வகையில் செய்தல் வேண்டும்.

இனிப்பாவாணர் கொள்கைகளைக் கடைப்பிடித்தால் மட்டும் போதுமானதாகும். பயனுள்ள முறையில் ஆய்வுகள் செய்வோர் செய்யட்டும். அஃது தமிழுக்கு ஆக்கம் சேர்ப்பவையே.

அறிவுத்திறத்தில் மேலோங்கியுள்ளவர்கள் இற்றைநாளில் தமிழகத்தில் பலர் இருக்கலாம். பலர் உருவாகலாம். சில ஆண்டுகளுக்குப் பிறகு உருவாகலாம். இன்றைக்கென்ன செய்வது? தமிழின், தமிழனின் அடிமைநிலையை யார் நீக்குவது? மறைமலையடிகளாரைப் போலவே, பாவேந்தரைப் போலவோ, இன்று யாருமில்லை.

அவர்கள், உணர்ச்சியை ஊட்டினர்; எழுச்சியை ஏற்படுத்தினர். புரட்சியை விளைத்தனர். அவர்களுக்கென்று பின்புலங்கள் அமைந்தன. அணிகள் உருவாயின. இற்றை நாளில் எல்லாம் போயின.

அவர்களெல்லாம், மொழிப்போர்க்களத்தில் இறங்கியவர்கள். இனிய தமிழ் எதிர்ப்பாரை எதிர்த்தவர்கள். செழும்புலமைப் போர்வாள்கள். அறிவியக்க ஆற்றல் மறவர்கள். பரந்தமனம் உடையவர்கள். அவர்களின் எண்ணங்கள் செயல்கள் பொதுநிலையில் இயங்கின. இன்றோ தம் நலத்தில், தம் பெருமையில், தாம் உயர்வதில் மட்டுமே இயங்கிவருகின்றன.

பாவாணர் இந்தியெதிர்ப்புப் போரில் இறங்கிப் பரப்புரைகள் செய்துள்ளார். உலகத்தமிழ்க் கழகத்தின் மூலமாக, தமிழன் பிறந்தகத்தைத் தீர்மானித்துள்ளார். தமிழ்த்தாய்க்குப் பெருமை சேர்க்கப் பேரகரமுதலியைப் படைத்துள்ளார். பேருழைப்பு புரிந்துள்ளார்.

பாவாணர் தம் பட்டறிவுக்கேற்பப் பலபணிகளைச் செய்துள்ளார். அவற்றுள் மொழியியற் பணி தலையாயது. அவற்றின் மூலமாக மேலும் செப்பப்படுத்திக்கொண்டு செல்வது தமிழர் தம் கடமையாகும்.

பாவாணர் வழியில் கலைச் சொல்லாக்க நூல்கள் பெருகுதல் வேண்டும். கலைச்சொல்லாக்க

நூல்கள் பெருகி வருவதால் மட்டும் பயனில்லை. கலைச்சொற்களைத் தமிழர்கள் தம் எழுத்திலும் பேச்சிலும் பயன்படுத்தவேண்டும். தமிழைத் தம் மூச்சாகக் கொண்டு வாழும் சிலர் மட்டும் பயன்படுத்துவதில் பயனில்லை. தமிழரெல்லாரும் பயன்படுத்தவேண்டும்.

தமிழகம், புதுவை உள்ளிட்ட தமிழர் கல்விக் கூடங்கள், ஆங்கில வழிக்கல்விக் கூடங்களாக மாறிவருகின்றன. திரை, தொலைக்காட்சி போன்றவை, ஆங்கிலக் கலப்புகளை அதிகமாகவே செய்கின்றன. இசை வடசொற்கலந்த கூட்டாகவே ஆகிவிட்டது. கோவிலில், வடமொழி வழிபாடே! நடுவணரசு அலுவலகங்கள் இந்திவழியில். வணிக விளம்பரங்கள் எல்லாம் ஆங்கிலத்தில். தமிழர் இல்லங்கள் ஆங்கிலேயர் இல்லங்களாக மாறிவருகின்றன.

தமிழ் எங்கே? தமிழர் எங்கே? எங்கும் தமிழ் எதிலும் தமிழ் எங்கே? ஆட்சியில் தமிழ் இல்லையென்றால், கல்வியில் தமிழ் இல்லையென்றால், தமிழ் வாழ்தல் அரிதே!

இவற்றையெல்லாம் பாவாணர் நன்குணர்ந்தே தமிழினத்தைத் தட்டியெழுப்பவும், தமிழ்மொழியை வளப்படுத்தவும், தமிழர் வரலாற்றைப் புதுப்பிக்கவும் பாடுபட்டார்.

அவர் பட்டபாட்டில் அதில் குறை, இதில் குறை, அவர் கூறியவை மொழியியலுக்கும்

அறிவியன் முறைக்கும் பொருந்தாது என்று ஆய்வுக்கட்டுரைகள் வழங்கிக் கொண்டிருந்தால் ஆவதொன்றுமில்லை. பேசிக்கொண்டிருப்பதினும் பயனில்லை. தமிழுக்கு ஆக்கம் சேர்க்கும் அளவில் பாவாணரினும் பாடுபடத் துணிந்து வருபவர் வருதல் நன்று.

இன்றைக்குப் பெரும்பாலோர், ஆய்வுரைகள் கட்டுரைகள் எழுதுகிறார்கள். தமிழின் மேன்மைக்குச் செயற்படுவோர் இல்லை.

பாவாணர் கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். கொள்கைகளை நிறைவேற்றவே வாழ்தல் வேண்டும். பாவாணர் கொள்கைக்காகவே வாழ்ந்தார். கொள்கை முழக்கமிட்டே மறைந்தார்.

பாவாணர், பாவாணர் தாம்; பாவாணர்க்கீடாக யாரும் வர இயலாது. இனிமேல் பாவாணர்க்கு மேலாக வருபவர்கள் வரவேண்டும். ஆட்சியில் தமிழன்னையை அமர வைப்பவர் எவரோ அவர்தாம் பாவாணரினும் மேம்பட்டவர்.

# 14. தமிழரிமா

பாவாணர்; பைந்தமிழ்ப் பாவாணர்;

அகவை எழுபதைக் கடந்தும் அயரா உழைப்பு அவர்க்கு!

அகரமுதலித் திட்டத்தில் மிகுந்த ஈடுபாடு!

தமிழின முன்னேற்றத்தில் தளராப்பற்று!

கொள்கையில் தனி உறுதி; செயற்பாட்டில் ஓய்வில்லை.

அவர்க்கு ஓய்வென்பது அகரமுதலியைப் புரட்டுவதே!

தன்னலங்கருதாத் தமிழரிமா இனி எப்போது பிறந்துவரப் போகிறது?

ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டில், மதுரையில், பந்தயத்திடலில் அமைந்த பேரரங்கில், 5.1.1981 பிற்கலில், 'மாந்தன் தோற்றமும் தமிழர் மரபும்' என்னும் பொருள்பற்றித் தனிப்பெரு விழைவோடு பேசத் தொடங்கினார்.

அவையில் ஆயிரக்கணக்கானோர் நிறைந்திருந்தனர். அருந்தமிழ் அறிஞர்களும்

கலந்திருந்தனர். ஆழ்ந்த உணர்வோடு தம்மை மறந்த நிலையில் பாவாணர் பேசிக்கொண்டிருந்தார்.

ஆய்வுப்பேருரை அருவியெனப் பொங்கிப் பாய்ந்தது அங்கே! அவையிடையே அவ்வப்போது கூச்சலும் சலசலப்பும் - உணர்விலிகள் உரையைச் செவிமடுக்காதிருந்தனர். தமிழர் தம் பொறுப்பற்ற தன்மை அங்கே வெளிப்பட்டது. ஒன்றே கால் மணிநேரம் ஒப்பற்ற உரை ஆற்றினார் பாவாணர்.

அன்றிரவு அவர் விடுதியில் தங்கியிருந்த போது அவர்க்குக் கடுமையான நெஞ்சுவலி ஏற்பட்டது.

உடன் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்.

முதலமைச்சரின் ம.கோ.இரா. (எம்.ஜி. இராமச்சந்திரனார்) ஈடுபாட்டால் அவர்க்குத் தனிக்கவனம் செலுத்தப்பட்டது.

மருத்துவர்கள் எல்லாரும் அக்கறையோடு செயல்பட்டனர்.

குடும்பத்தாரும் அவருடன் இருந்தனர்.

அவர் மயக்கநிலையில் இருந்தார். மீண்டும் 14.1.81இல் கடுமையான நெஞ்சுவலி ஏற்பட்டது. மருத்துவர்கள் அவரைக் காப்பாற்ற அரும்பாடு பட்டனர்.

அவர் பேச்சைப் புறக்கணித்த தமிழ்மக்களை 15.1.81 இரவு 12.30மணிக்கு அவர் முழுமையாகப்

புறக்கணித்துச் சென்றுவிட்டார். தமிழரின் நீடுதுயில் நீக்கப் பாடுபட்டவர், மீளாத்துயிலில் தம் வாழ்வுக்கு முடிவுரை எழுதிவிட்டார்.

**பாவாணர் கூற்று**

நான் பள்ளியிறுதி மாணவனாயிருந்தபோது ஆங்கிலப்பற்றாளனாகவும் பேச்சாளனாகவு மிருந்ததனால், என் பயிற்சி முடிந்தபின் ஆங்கில இலக்கியத்தைச் சிறப்பாகச் சேக்சுப்பியரின் முப்பானேழ் நாடகங்களையும் கற்றாய்ந்து கரைகண்டு எருதந்துறை (ஆக்ஸ்போர்டு) ஆங்கிலப் பேராசிரியனாக அமர விரும்பினேன். ஆயின், எதிர்பாராத சில சூழ்நிலைகளால் என் மனம் தமிழ்ப்பணிக்கு ஈர்க்கப்பட்டுவிட்டது.

அதன்பின், மொழியாராய்ச்சியில் ஆழ மூழ்கித் தமிழின் அடிநிலை கண்டு தமிழே திராவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கு மூலமும் என்று உண்மை உணர்ந்ததனாலும்,

அவ்வாராய்ச்சி முற்றுமாறு மேனாள் சேலங்கல்லூரி முதல்வர் பேரா. இராமசாமி (க்கவுண்டர்) அவர்கள் அக்கல்லூரியில் என்னைத் தமிழ்த்துறைத் தலைவனாக எளிதாயமர்த்திக் கொண்டமையாலும்,

நிறைதமிழ் மலையாம் மறைமலையடிகள் என்னைப் பாராட்டி ஊக்கியமையாலும்,

என் மொழியாராய்ச்சி நூல்கள் பல வெளிவர வாய்ப்பு நேர்ந்தமையாலும்,

என்னையன்றி வேறெவரும் இவ்வாராய்ச்சி செய்யாமையாலும்,

இவ்வாராய்ச்சிக்கு இன்றியமையாத பண்புகளையெல்லாம் இறைவன் என் பிறப்பிலேயே அமைத்துவிட்டமையாலும்,

ஆங்கிலப்பணியாற்ற விருந்த என்னை இறைவன் தமிழ்ப் பணிக்குத் தடுத்தாட் கொண்டதாகவே கருதுகின்றேன்.

நான் எத்தனையோ நூல்கள் எழுதினும், என் அரை நூற்றாண்டாராய்ச்சியின் தலைசிறந்த பயன், தமிழ்ப்பகைவர் தொகுத்த சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகர முதலியைத் திருத்துவதும், (தமிழைச் சமற்கிருதக் கிளைமொழியாகக் காட்டுகிறது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகர முதலி), செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியொன்று தொகுப்பதுமே. இவ்விரண்டிற்கும் பெருஞ்செலவு செல்லுமாதலால் பல்கலைக்கழகமும் அரசுமே இப்பணியை மேற்கொள்ளத்தக்கன.

*தென்மொழி - சுவடி: 8. ஓலை: 8, 9. 1970.*

பாவாணர் ஆங்கிலத்திலும் தமிழிலும் பெரும்புலமை உள்ளவர்; பன்னூல்கள் எழுதியுள்ளார்; இவற்றைத் தமிழுலகம் நன்கறிந்ததே. மறைமலையடிகளார், தமிழ், ஆங்கிலம், சமற்கிருதம்

ஆகியவற்றில் பெரும்புலமை உள்ளவர்; தமிழுலகம் இதையும் நன்கறியும்.

பாவாணரின் கொள்கையைப் புலமைத் திறத்தைத் தமிழுலகம் நன்கறிந்து இருந்தாலும் அது இயக்க அளவில் வரும்போதுதான் நன்கு பரவும். தமிழ் மக்களுக்குப் பயன்படும். ஓர் எழுச்சியைத் தோற்றுவிக்கும்.

அறிஞர்கள் பலர் நிறைய எழுதலாம்; மேடைகளில் முழங்கலாம். அவற்றால், பாராட்டுகள், பரிசுகள் கிட்டலாம். பாவாணர் ஒரு கொள்கையுடையவர். அக்கொள்கையை உயிர் மூச்சாகக் கொண்டவர். அக்கொள்கை பரவ இயக்கம் தேவை; ஏடுகள் தேவை. அந்த வகையில் பாவாணர்க்குத் தென்மொழியும், உலகத் தமிழ்க்கழகமும் கொள்கை வெளிப்பாட்டுக் கருவிகளாக இருந்து உதவிபுரிந்தன.

பாவாணரின் புலமைத்திறத்தையும் ஆய்வுச் சிறப்பையும் அறிந்தே பாவாணர்க்குப் பேரளவில் பக்கத் துணையாகப் பாவலரேறு பெருஞ்சித்திரனார் இருந்துவந்தார். பல்கலைக் கழகமும் அரசும் செய்யவேண்டிய பணியைத் தாமே செய்யவேண்டும் என்று முற்பட்டபோது ஒரு திங்கள் வெளிவந்த தென்மொழியில் முழுமையாகவே செந்தமிழ் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்டத்தை வெளியிட்டுப் பாவாணர் பணிக்கு ஒத்துழைப்பளித்தார்.

பாவாணர்க்கு, 1970 முதல் 1980 வரையுள்ள காலம் பேருழைப்பும் தன்னம்பிக்கையும் முயற்சியும் மிகுதியாக இருந்த காலம். அப்போதுதான் உலகத்தமிழ்க் கழகத்தோற்றம், அதன் வளர்ச்சி, செ.சொ.பி. அகரமுதலித் திட்டத்தை அரசே ஏற்று அவரை இயக்குநராக்கியது, தனித்தமிழ் அன்பர்கள் பாவாணர் மேல் வைத்திருந்த தளராத பற்று எல்லாம் இருந்தன. அவை தனித்தமிழின் புதியதொரு வீச்சிற்கு அடித்தளமிட்டன எனலாம்.

ஆனால், காலம் அவரை, 1981 சனவரிக்குள்ளாகவே கவர்ந்துகொண்டது. அதற்குப் பின்னர் இருபதாண்டுக்காலமும் கடந்துவிட்டது. கடந்த இருபதாண்டுகளில், பாவலரேறு பெருஞ்சித்திரனார் களப்போர்க் களிறாக எழுந்தார். பற்பல போராட்டங்களில் கலந்துகொண்டார். சிறைப்பட்டார். தம்மால் இயன்றவரை முழுமூச்சாகத் தமிழுக்கும் தமிழின முன்னேற்றத்திற்கும் அயராது உழைத்தவர் ஒற்றுமையற்ற தமிழினத்திற்கு மேலும் உழைக்க முடியாமல் முற்றுப்புள்ளி வைத்துக்கொண்டார்.

இன்றும், தமிழியக்கம், தமிழ்ச்சான்றோர் பேரவை, தலைநகர்த் தமிழ்ச்சங்கம், தமிழர் தேசியக் கட்சி போன்றவை மொழிப்போர்க் களத்தில் நின்றுகொண்டு போராட்டக்கணைகளைத் தொடுத்து வருகின்றன. புதுச்சேரியில் தமிழ் வளர்ச்சி நடவடிக்கைக் குழுவும் போராட்டங்களை

நடத்தி வருகிறது. ஆனால், இன்னும் தமிழினம் எழவில்லை. எழுப்பவும் இயலவில்லை. தமிழினம் எழுந்தால் போரெனா ஒன்று தேவையில்லை.

தமிழினம் தம்மொழியைப் போற்றிக் காத்து வளர்க்க முற்பட்டால் தமிழ்காக்கும் புரட்சித் தலைவர்கள் புதிதாக இனிமேல் யாரும் பிறந்து வரவும் தேவையில்லை. இனமெழுந்தால்தான் அவ்வின மொழி எழும்; எழமுடியும்; இஃது உறுதி.

பாவாணர் தமிழாட்சி நிலவுதற்குப் பல நிலைகளில் எண்ணியுள்ளார். அவற்றுள் ஒன்று அரசியல்; பாவாணர்க்கு மொழி உணர்வுள்ள தமிழர்கள் அரசியலைப் பிடிக்கவேண்டும் என்பதில் உறுதியான கொள்கை இருந்தது. அதற்காகவே உலகத் தமிழ்க் கழகத்தை ஓர் அரசியல் இயக்கம் போலவே வளர்க்க முன்வந்தார். அதற்காக ஒருகொடியும் அமைத்தார்.

சிலர் அரசியலுக்கு வந்தும் கட்சி நிலைப்பாடின்மையால் கொள்கை நிறைவேற்றத்தில் குறை விழுந்துவிடுகிறது. தமிழ்க்கொள்கையை அரசியல் வழியாக நிலைப்படுத்த வேண்டுமென்றால், தமிழ் உணர்வாளர்கள் பலர் அரசியலைப் பிடிக்கவேண்டும். கொள்கையைச் செயற்படுத்த முனைதல் வேண்டும்.

தமிழின எழுச்சிக்கு முதலில் வேண்டுவது ஒற்றுமை. அவ்வொற்றுமையை எதிர்நோக்கி எதிர்நோக்கி நூற்றாண்டுகள் பல கடந்துவிட்டோம்.

முதலில் தமிழ் இனத்திற்கான கொள்கையை விதைக்க முடியவில்லை. விதைத்தால்தானே வளர்க்கமுடியும். தமிழினம் தமிழை ஏற்கவில்லை.

வழிமாறிப் போகிறது தமிழ்நாடும் புதுச்சேரியும். அதிலும் புதுச்சேரியின் நிலை மிகவும் இழிவானது. தமிழ் தலையெடுக்க முடியாத அளவில், அவரவரும் புதுச்சேரி மாநிலத்திற்கு ஐந்து மொழி ஆட்சி மொழியென்று அறியாமல் சொல்லி வருகின்றனர். 95 விழுக்காட்டினர் தமிழர்; தமிழ்மொழியைத் தாய்மொழியாய்க் கொண்டவர். ஈரத்தில் களத்துமேட்டில் முளைத்த பயிர்க்கு உரமிட்டுக் கழனியைக் காயவைப்பது போலப் புதுச்சேரியில், தமிழ்ப்பயிர் காய்கிறது.

இன்றைய காலக் கட்டத்தில் தமிழ் வளர்ச்சிப்பணி, தமிழர் எழுச்சிப்பணி, தமிழ் ஆட்சிமொழிப் பணி ஆகியவை இன்றியமையாதவை. அதற்குரிய போராட்டக் களத்தைப் பாவாணர் வழியில் அமைத்துக் கொள்வது சிறந்தது.

தமிழ் வளர்ச்சி கருதுவார் எல்லாம் பாவாணர் கொள்கை அடிப்படையில் ஒருவழிப்பாதையில் செல்லவேண்டும். சிறுசிறு கருத்து வேறுபாடுகளை அடியோடு விட்டுவிடவேண்டும்.

முதலில் பாவாணர் கருத்துகளைத் தமிழர் நெஞ்சில் பரவச் செய்தல் வேண்டும். தமிழரைத் தமிழ் எழுச்சி உள்ளவர்களாக்கவேண்டும். பிறகு

போராட்டக்களத்தை அமைத்துச் செயற்படுத்த வேண்டும். உணர்வுகளைச் செயற்பாட்டில் கொண்டுவருவதே சிறந்தது. அதற்குப் பாவாணர் நூல்கள் படைக்கலன்களாக விளங்கும்.

தனித்தமிழ் இயக்கத் தோற்றத்தால் ஓரளவு வளர்ச்சி ஏற்பட்டுள்ளதென்றாலும் அது கால அளவிலும், பெருமுயற்சியிலும், உழைப்பிலும் நோக்க மிகச்சிறியதே ஆகும். ஆங்காங்குள்ள இயக்கங்கள் பாவாணர் கருத்துகளையே மாணவர், இளைஞர், பொதுமக்கள் ஆகியோரிடம் என்றும் பரவச்செய்தல் வேண்டும் போலியாகச் செயற்படுதலும், செயற்படுவதுபோல் காட்டிக் கொள்ளுதலும், வெறுமையாக எழுதுவதும் பேசுவதும் பயனற்றவை. எத்தனை தலைமுறைகள் ஆனாலும் எள்முனையளவும் தமிழ் வளர்ச்சியைக் காணல் அரிது.

கண்டவற்றில் கால் வைத்துக் காலத்தை வீணாக்கிக் கொண்டிராமல் உண்மையாகப் பாவாணர் கொள்கை ஒன்றையே கடைப்பிடித்து வந்தால் தமிழ்க்காலம் விரைவில் கனியும். எல்லாருடைய, எழுத்தும், பேச்சும், செயலும் தமிழ் வளர்ச்சிக்காகவும், தமிழாட்சிக்காகவும் மட்டுமே சில ஆண்டுகளாவது இருக்கட்டும். அப்போதுதான் பாவாணர் கொள்கை நிறைவேறும்.

# 15. தமிழின் சிறப்புகள்

ஓரிரு நூற்றாண்டுகளில் (18-19 ஆம் நூற்றாண்டுகள்) தமிழ்நாட்டிற்கு வருகைதந்த மேனாட்டறிஞர்களும், நந்தமிழறிஞர்களும் தமிழின் அருமை பெருமைகளையும், தோற்றம் வளர்ச்சிகளையும் தமிழ் தனித்தியங்கும் தன்மைகொண்டது என்பதையும் அவ்வப்போது பற்பல வகைகளில் எடுத்துக் கூறி வந்துள்ளனர். அவ்வாறு கூறிய கருத்துகளெல்லாம் பாவாணரின் கருத்துகளுக்கும் கொள்கைகளுக்கும், ஆய்வுகளுக்கும் அரண் செய்வனவாக அமைந்துள்ளன என்பதைப் பின்வரும் பகுதிகளால் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

ஆங்கிலேயர்கள் பிரெஞ்சு, ஜெர்மன் இத்தாலியன் முதலிய பாஷைகளைப் போய் படித்துக்கொண்டு இடர்ப்படுகிறார்கள். இப்படிச் செலவிடப்படும் காலத்தைத் தமிழ் கற்பதில் செலவிட்டால், எவ்வளவோ விசேஷமாகும். நான் அநேக ஆங்கில மாதர்களுக்குத் தமிழ் கற்பித்திருக்கிறேன். அவர்களுடைய இதழ் நயத்திற்கும், செவி நுட்பத்திற்கும், அபிருசிக்கும் அந்தப் பாஷையைப்போல் எந்தப்பாஷையும் ஒத்துவருவதில்லை.

*முனைவர் போப். பாரதி புதையல் பெருந்திரட்டு. பக். 260*

மனிதரால் பேசக்கூடிய செம்மை செய்யப் பெற்ற தூய்மையான மொழிகளுள் தமிழும் ஒன்று.

*தாய்லர்* (Taylor)

திராவிட மொழிகளுள் துல்லியமாகச் சரியாகச் சிந்திப்பதற்குத் தகுந்த பொருத்தமான மொழி தமிழாகும்.

*பர். இசுலேட்டர்* (Slater)

தமிழ் படிக்காதவர்கள் தமிழ்நாட்டில் வசிக்க யோக்கியர்கள் அல்லர்.

அவர்கள் எந்த ஊர் பாஷைகளைப் படிக்கிறார்களோ அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடமாகையால், சுயபாஷையைப் படிக்காமல் இங்கிலீஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீஷ் தேசத்துக்கு அனுப்பிவிடுவோம்.

பிரான்சு மட்டும் படிக்கிறவர்களைப் பாரிசுப் பட்டணத்திற்கு அனுப்புவோம். இலத்தீனுக்கும், சமற்கிருதத்திற்கும் சொந்த ஊர் இல்லாதபடியால் அந்தப் பாஷைகளைப் படிக்கிறவர்களை அநாமகரத் தீவுக்கு அனுப்புவோம்.

*மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை*
*(நூல் : பிரதாப முதலியார் சரித்திரம்)*

திராவிட மொழிகளுள் தமிழ்மொழியே மிகத்தொன்மை வாய்ந்ததும் பெருவளம் பொருந்தியதுமாகும். மிகவும் சீர்திருந்தியமைந்த உயர்தனிச் செம்மொழியுமாகும். சொல்வளம்

மிகுந்தது; கணக்கிட முடியாப் பழங்காலந் தொட்டே பயின்றும் வருவது.

*- கிரியர்சன்*

செய்யுள் அமைப்பில் கிரேக்க மொழியினையும் இலக்கியப் பெருமையில் இலத்தீன் மொழியினையும் வெல்லவல்லது தமிழ்மொழி.

*- வின்சுலோ*

எந்த நாட்டினரும் பெருமை கொள்ளக்கூடிய இலக்கியம் தமிழ் இலக்கியம்.

*-எப்.எம். கெல்லட்டு.*

தென்னாட்டுத் திராவிட மொழியிலிருந்து சப்பான்மொழி தோன்றியதென்று சான்றோர் டிங்கி கூறுகின்றார்.

*- உலோகோபகாரி.*

சப்பானிய மொழிக்கும் செந்தமிழ் மொழிக்கும் நெருங்கிய தொடர்பிருப்பதற்கான ஆதாரங்கள் பற்றிய செய்தியொன்று எல்லாப் பத்திரிகைகளிலும் வெளிவந்ததைத் தொடர்ந்து ஒரே நாளில் ‘தமிழ்’ எனும் சொல் சப்பான் நாடெங்கும் பரவிவிட்டது.

*உலகத்தமிழ் - பக். 227*
*(5ஆவது உலகத்தமிழ் மாநாட்டு வெளியீடு)*

சப்பான் மொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுவாக 300க்கும் மேற்பட்ட சொற்கள்

இருக்கின்றன. 500 சொற்கள் ஒரே பொருள் தருவதாக இருமொழிகளிலும் இயங்கி வருகின்றன.

*சப்பானிய மொழியியல் அறிஞர் சு. சுமு. ஓனோ.*

உலகத்து மொழிகளிலேயே மிக அதிகமான வேர்ச்சொற்களையுடைய மொழியாகத் தமிழ் அமைந்திருக்கிறது.

*முனைவர் எமனோ.*

வாழிடத்தைக் குறிக்கும் சொல் பொதுவாக 'வீடு' என்பதே ஆகவும், தெலுங்கிற்கு உரியதான 'இல்' என்பதையும், கன்னடத்திற்கு உரியதான 'மனை' என்பதையும், சமற்கிருதத்திற்கு உரியதான 'குடி' என்பதையும், தமிழ் பெற்றுள்ளது. இவ்வாறு திராவிடச் சொல்லுருவங்கள், சொல் மூலங்களின் களஞ்சியமாய்க் காட்சி அளிக்கிறது தமிழ். ஆகவே, தமிழ் இலக்கிய நாகரிகத்தின் தோற்றக்காலம், அவ்வினப் பிறமொழி இலக்கிய நாகரிகத்தின் தோற்ற காலத்திற்கு மிகமிக முற்பட்டதாகும் என்றும், திராவிடத் தென்மொழி அவ்வினப் பல்வேறு மொழிகளாகப் பிரிவுண்ட காலத்திற்கு நனிமிக அணித்தான காலத்தைச் சேர்ந்ததாகும் என்றும் முடிவுகட்டிக் கூறலாம்.

இன்றைய கன்னடமொழியும், இன்றைய தெலுங்கு மொழியும் தமிழோடு மாறுபடும் ஒவ்வொரு இயல்பிலும், பழங்கன்னடமும், பழ மலையாளமும், துளுவும், துட, கோண்டு, கூ, மொழிகளும் ஒத்திருப்பதும், தமிழ் மொழியின்

தொன்மை தூய்மை ஆகிய பெருமைகளுக்குச் சாலச் சிறந்த சான்றாகும்.

*- திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்.*
*பக். 116 - 117.*
*முனைவர் - கால்டுவெல்.*

தமிழகம் என்பதே த்ரவிடம் என்பதன் மூலம்

*- கிரியர்சன்*
*இந்திய மொழியாராய்ச்சி*

இந்தியாவிற்கு வருகை தந்த கிறித்துவப் பாதிரிமார்களின் சமயப் பிரச்சாரம், மொழி, பண்பாடு பற்றிய ஆய்வுகள் பெரும்பாலும் தென்னாட்டிலேதான் நிகழ்ந்தன. இதனால் வடஇந்திய இலக்கியம் பற்றிய செய்திகளைக்கூடத் தென்னிந்தியரிடம் குறிப்பாகத் தமிழ் மலையாளம் பேசும் மக்களிடமிருந்துதான் ஐரோப்பியர்கள் தொடக்கநிலையில் தெரிந்து கொண்டனர். எனவே, கி.பி 16-17ஆம் நூற்றாண்டுகளில் சமற்கிருத ஆய்வைவிட திராவிடமொழிகள் தொடர்பான ஆய்வுகளிலே அவர்கள் அதிக ஆர்வம் காட்டினர்.

இதன் விளைவாகத் தமிழ் மொழிக்குப் பல்வேறுபட்ட அகராதிகள் தயாரிக்கும் பணியும் தமிழ் இலக்கியங்களைப் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கும் முயற்சிகளும் கொஞ்சம் கொஞ்சமாக மலரத் தொடங்கின. ஆனால் இவர்களின் பெரும்பாலான செயற்பாடுகள் 18ஆம் நூற்றாண்டில் கல்கத்தாவுக்கு மாற்றப்படவே

கல்கத்தாவை மையமாகக்கொண்டு இவர்கள் செயல்படத் தொடங்கினர். இந்த இடமாற்றத்தால் உலகம் தழுவிய நிலையில் தமிழை அறிமுகப்படுத்தவும், பரப்பவும், ஆய்வு செய்யவும் ஏற்பட்ட அரிய வாய்ப்புகளை தமிழ்மொழி இழக்க நேரிட்டது.

கல்கத்தாவை மையமாகக்கொண்டு செயல்பட்ட மேனாட்டுச் சமயத் தொண்டர்களும், அரசு அதிகாரிகளும் வட இந்திய மொழிகளைக் குறிப்பாகச் சமற்கிருதத்தைக் கற்பதிலும் பரப்புவதிலும் ஆர்வங்காட்டத் தொடங்கினர். இந்த ஆர்வம் காலப்போக்கில் ஆசியக் கல்விச் சங்கம் எனப்பெயரில் ஒரு நிறுவனமாக மலர்ந்தது. சமற்கிருதத்திற்கு உலகச் செம்மொழி என்னும் தகுதியைப் பெற்றுத் தருவதில் இந்த ஆசியக் கல்விச் சங்கம் ஆற்றியபணி அளவிடற்கரியது!.

*- செம்மொழிகளின் வரிசையில்*<br>*தமிழ் - பக். 25*<br>*முனைவர் சான். சாமுவேல்.*

# 16. பாவாணர் மொழிப்புலம்

## தமிழர் ஆட்சியில் படைத்துறைச் சொற்கள்

தமிழர் வாழ்வில் கழகக் (சங்கம்) கால ஆட்சியே பொற்கால ஆட்சியாகும்.

தமிழர் வாழ்வியல், ஆட்சி முறை, வணிகம், வேளாண்மை, நாட்டுப்பாதுகாப்பு, பண்டமாற்று, காசு, கல்வி, கலை, சமயம், பொருளியல், திருப்பணிகள், விழாக்கள் போன்ற எல்லா நிலைகளிலும், மிகப்பெரிய, மிகத்திருந்திய நிலைகளில் தமிழர் ஆட்சி செம்மையாகச் செயல்பட்டு வந்துள்ளன. அவற்றையெல்லாம், பழந்தமிழ் இலக்கியச் சான்றுகள் மூலம் எடுத்துக்காட்டுவது படிப்பவரை வியப்பில் ஆழ்த்திவிடும்.

இவ்வாறெல்லாம் வாழ்ந்த தமிழர்கள் இக்காலத்தில், மொழியாலும், சமயத்தாலும், நாகரிகத்தாலும் அடிமைப்பட்டுக் கிடக்கிறார்களே என்று எண்ணியெண்ணி வருந்த வேண்டியுள்ளது.

அக்காலத் தமிழர்கள் ஆட்சி, இக்கால வல்லரசுகளையும் விஞ்சக்கூடிய அளவில் அறிவுத் திறத்தோடு ஆட்சி புரிந்த வன்மை உலகையே வியக்கவைக்கும்.

பழம்பெருமை பேசுவதில் பயனில்லை என்றாலும், அவற்றையெல்லாம் இன்று படித்து எண்ணும்போது, வளரவேண்டிய இனம், பெருமையுள்ள இனம் இன்று தாழ்வுற்றுக் கிடக்கிறதே என்று எண்ணாமலிருக்கமுடியாது.

முன்னிருந்த நிலைகளை எண்ணி, இன்றென்ன செய்யவேண்டும் என்று செயற்பாடுகளில் இறங்கவேண்டியது தமிழர் கடமையாகும்.

பழந்தமிழ் இலக்கியங்களில் கல்வெட்டில் தக்க பயிற்சியுடையவர் பாவாணர் என்பதை அவருடைய 'பழந்தமிழாட்சி' என்னும் நூலிற்காணலாம்.

மதுரைப் புறமதிலிருந்த பொறிகளும் கருவிகளும் உறுப்புக்களுமாவன:-

1. வளைவிற்பொறி - வளைந்து தானே எய்யும் எந்திரவில்.
2. கருவிரலூகம் - கரிய விரலையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறி.
3. கல்லுமிழ்கவண் - கல்லையெறியும் இருப்புக்கண் (இடங்கணி)
4. பரிவுறுவெந்நெய் - காய்ந்திறைத்தலாய் சேர்ந்தாரை வருத்தும் நெய்.
5. பாகடு குழிசி - செம்புருக்கும் மிடா. (அகன்ற வாயுடைய பானை)

6. காய் பொன்னுலை - உருகக் காய்ச்சியெறியும் எஃகு உலை.
7. கல்லிடு கூடை - இடங்கணிப்பொறிக்குக் கல்லிட்டு வைக்குங் கூடை.
8. தூண்டில் - அகழியைக் கடந்து மதிலைப் பற்றுவாரை மாட்டியிழுக்குத் தூண்டில் வடிவான பொறி.
9. தொடக்கு - கழுத்திற்கு பூட்டி முறுக்கும் சங்கிலி
10. ஆண்டலையடுப்பு - பறந்து உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் ஆண்டலைப்புள் வடிவமான பொறிவரிசை.
11. கவை - அகழியினின்றேறின் அதற்குள் விழத்தள்ளும் இடுப்புக்கவை.
12. கழு - கழுக்கோல்
13. புதை - அம்புக்கட்டு
14. புழை - ஏவறைகள்
15. ஐயவித்துலாம் - அம்புத்திரள் தொங்கவிட்ட விட்டம்.
16. கைபெயரூசி - மதிற்றலையைப் பற்றுவாரின் கையைப் பொதுக்கும் ஊசிப்பொறிகள்.
17. சென்றெறி சிரல் - பகைவர் மேற்சென்று அவர் கண்ணைக் கொத்தும் சிச்சிலிக் குருவி வடிவான பொறி.
18. பன்றி - மதிற்றலையிலேறினாருடலைக் கொம்பாற் கிழிக்கும் இருப்புப்பன்றி.
19. பணை - அடிக்கும் மூங்கில் தடி வடிவானபொறி.

20. எழுவுஞ்சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியில் நிலத்தில் கீழே விடும் மரங்கள்.
21. கணையம் - கோட்டை மதிற் கதவுக்குத் தடையாகக் குறுக்கேயிடும் உத்தரம்.
22. கோள் - விட்டேறு.
23. குந்தம் - சிறுசவளம்.
24. வேல் - ஈட்டி
25. ஞாயில் - குருவித்தலை என்னும் மதிலுறுப்புக்கள்.
26. நூற்றுவரைக் கொல்லி.
27. தள்ளிவெட்டி
28. களிற்றுப்பொறி.
29. விழுங்கும் பாம்பு.
30. கழுகுப்பொறி.
31. புலிப்பொறி.
32. குடப்பாம்பு.
33. சகடப்பொறி.
34. தகர்ப்பொறி.
35. அரிநூற்பொறி.

**பழந்தமிழர் ஆட்சியில் படை வகைகள்**

படை வகைகள் - பொருள் இடம் பற்றி;-

1. நிலப்படை - Military
2. கடற்படை-Navy. (கலப்படை, கப்பற்படை)

**நிலப்படை ஊர்திகள்**

1. கரிப்படை
2. பரிப்படை
3. தேர்ப்படை
4. காற்படை (அல்) காலாட்படை.

**கருவி பற்றிய படைகள்**

1. விற்படை
2. வாட்படை
3. வேற்படை.

**போர்மறவர் :** பொருநர் - படையாட்கள், படைஞர்.
**யானைமறவர் :** ஆனையாட்கள் - ஆனைப்பாகர், குஞ்சரமல்லர், அத்திமல்லர்.
**தேர்ப்படை :** சங்க காலத்திற்குப் பின் பயன்படுத்தப் பெறவில்லை.

மேலும், மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, குடிப்படை, துணைப்படை, பகைப்படை என்றும் இருந்துள்ளன.

மூலப்படையை வள்ளுவர் தொல்படை என்பர்.

வாழையடி வாழையாக இருந்துவருவதும்.

போரை விரும்புவதும், இறப்பிற்கு அஞ்சாததும், அரசனைக் காக்க உயிர் ஈவதும் தொல்படையே.

கூலிப்படை - போர்க்களத்தில் புதுவதாகக் கூலிக்கமர்த்தப்படுவது.

நாட்டுப்படை - மருதநிலமக்கள் சேர்ந்தது.

காட்டுப்படை - பாலை நிலத்தாரும், குறிஞ்சிநில மாந்தரும் சேர்ந்தது.

குடிப்படை - தொண்டு காரணமாகத் தாமாக வந்து உதவும் படை.

போர் முடிந்தபின் மூலப்படை தவிர மற்றபடைகள் கலைக்கப்படுவது மரபு. கலைக்கப்பட்ட படையினர் தம் மரபுத் தொழிலைத் செய்துவருவர்.

நிலைப்படை - போர் முடிந்தபின் ஆங்காங்கு நிறுத்தப்படுவது நிலைப்படையாகும். இதில் மூலப்படையைச் சார்ந்தவரே இருப்பர்.

நிலைப்படை நிறுத்தப்பட்ட நகர் படைவீடு என்றும் அது நிறுத்தப்பட்ட நிலப்பகுதி படைப்பற்று என்றும் அது குடியிருக்கும் வீட்டுத் தொகுதி படைநிலை என்றும் பெயர் பெறும். நிலைப்படையினர் மனைவி மக்களுடன் கூடி வாழ்வர்.

இக்கால் தமிழ்மக்கள், வடசொல் எது? தென் சொல் எது? என்று அறியாமல் எண்ணற்ற வடசொற்களையும், எண்ணற்ற ஆங்கிலச் சொற்களையும் கலந்து பேசியும் எழுதியும்

வருகின்ற சூழல் வளர்ந்து கொண்டே இருந்தால், தமிழ்ச் சொல்வளம் தாமே குறைந்து கொண்டு தான் போகும்.

பாவாணர் எண்ணற்ற வடசொற்கும், ஆங்கிலச் சொற்கும் உரிய தமிழ்ச் சொற்களை ஆக்கித் தந்து அரும்பணியாற்றியுள்ளார். அவருடைய பேராற்றலால் விளைந்த பெருஞ்செல்வத்தைத் தமிழர்கள் பயன்படுத்தினால் தமிழ் வளரும்.

**சொல்லாய்வுத் திறம்**

'உல்' என்னும் வேர்ச்சொல்லை அடிப்படையாகக் கொண்டு உருவாகும் பல சொற்களைப் பாவாணர் விளக்கிக் காட்டும் திறம் அவருடைய ஆய்வுக்கு எடுத்துக்காட்டாகும். இதுபோல் ஆயிரக்கணக்கான வேர்ச்சொற்களின் மூலம் பன்னூறாயிரம் சொற்கள் கிளைத்தமை கண்டால் பெருவியப்பைத் தராமலிருக்காது. அவ்வளவும் பாவாணரின் பேருழைப்பாகும்.

உல் - எரிதற் கருத்துவேர்.

உல் - உல. உலத்தல் = காய்தல், வற்றுதல், சாதல், அழிதல், முடிதல், கழிதல் -

உல் - உணவை = வற்றிய கிளை.

உல் - உலர். உலர்தல் = காய்தல், வாடுதல்.

உலர் - உறு. உலறுதல் = வற்றுதல், வாடுதல், சினத்தல்

உல் - உலை = நெருப்புள்ள அடுப்பு. சமைத்தற்குக் காய்ச்சவேண்டியநீர். கொல்லன் உலை.

உல் - உள் - உண் - உண்ணம் = வெப்பம்.

உண்ணம் - உஷ்ண.

உண் - உண - உணத்தல் = காய்தல்.

மிளகாய்வற்றலை உணந்த மிளகாய் என்பது வடார்க்காட்டு ஆம்பூர் வட்டத்து வழக்கு.

'தலையை உணத்து' என்பது நெல்லை மாவட்ட வழக்கு.

உண - உணத்து (பிறவினை) தலை உணந்துவிட்டது.

உண - உணங்கு. உணங்குதல் = காய்தல்.

உணங்ஙு - மலையாளம்.

உல - உர் - உரு.

உருத்தல் - அழலுதல் - பெருஞ்சினங்கொள்ளுதல்.

முதிர்தல் -

உரு - நெருப்பு.

உருகு - உருகு. உருகுதல் - வெப்பத்தால் இளகுதல். மனநெகிழ்தல் - மெலிதல்.

போன்று பன்னூறு சொற்கள் உருவாகின்றன. அவற்றைப் பாவாணர் எடுத்துக்காட்டுந் திறம் வியத்தற்குரியதாம்.

பகுதி, விகுதி என்னும் சொற்கள் வடசொற்கள் என்று தமிழறிஞர்கள் கருதி வந்தனர்.

அதற்காக முதனிலை இறுதிநிலை என்றும் தனித்தமிழில் பகுதி விகுதி என்றும் வ்ழங்கினர். தொல்காப்பியர் முதல் - ஈறு என்று வழங்கியுள்ளார். பாவாணர் அச்சொற்களின் பாகுபாட்டை விளக்கும் வகையில் அவை தென்சொற்கள் என்று நிறுவியுள்ளார்.

பகுதல் -

பொருள்கள் பல பகுதிகளாய்ப் பிரிதலே பகுதலாம்.

புள் - (பள்) - (பழு) - பகு; ஒப்பு நோக்கு - தொழு - தொகு.

பகுதல் - பிரிதல். பக்கிசைத்தல் = பிரிந்தொலித்தல்.

பகு - பகுதி = பிரிவு. கூறு. கண்டுமுதலில் ஆறிலொரு கூறான அரசிறை. பகு சொல்லுறுப் பாறனுள் ஒன்றான முதனிலை.

பகுதி, விகுதி என்னும் தென்சொற்களின் பொருளும், ப்ரக்ருதி, விக்ருதி என்னும் வட சொற்களின் பொருளும் வெவ்வேறாம்.

பகுதி = கூறு. விகுதி = ஈறு. விகுதல் = முடிதல்.

ப்ரக்ருதி = இயற்கை. (முன் செய்யப்பட்டது).

இயல்பு. விக்ருதி = விகராம், பகுதியும் திரிபை (விகாரத்தை) அடையக் கூடுமாதலாலும் சந்தி

சாரியை இடைநிலை என்பவும் திரிபை உண்டுபண்ணுதலாலும், விகுதியென்னும் உறுப்பிற்குத் திரிபு என்னும் பொருள் பொருந்தாது.

பகுதி விகுதிகள் முதனிலை இறுதிநிலை யென்று பெயர் பெறுதலாலும் அவற்றிற்குக் கூறு, ஈறு என்பனவே சொற்பொருள் என்பது துணியப்படும்.

களத்தில் முதலாவது அரசனுக்குச் செலுத்தப்படும் பகுதி சிறப்பாகப் பகுதி- என்றே பெயர் பெற்றதுபோல் பகு சொல்லுறுப்புக்களுள் முதன்மையானதும் பகுதி என்றே பெயர் பெற்றதென்க!

ஆகவே, பகுதி, விகுதி என்பன ப்ரக்ருதி, விக்ருதி என்பவற்றின் திரிபல்லவென்று தெளிந்து கொள்க.

பகுதி விகுதியென்னும் தென்சொற்களினின்றே ப்ரக்ருதி, விக்ருதி என்னும் வடசொற்களைத் திரித்துக்கொண்ட, அவற்றிற்குப் பொருந்தப் புளுகலாக வேறு பொருள் கூறுகின்றனர் வடவர் என்க.

பகு - பகம் = பகுதி - ஆறு என்னும் தொகை:

வேளாளன் விளைவு, 1. அரசன், 2. தென்புலத்தார், 3. தெய்வம், 4. விருந்து, 5, ஒக்கல், 6. தான் என்னும் அறுவர்க்குப் பகிர்ந்தளிர்க்கப் பட்டதனாலும் பகுசொல், பகுதி, விகுதி, சந்தி,

சாரியை, இடைநிலை, வேறுபாடு (விகாரம்) என்னும் ஆறுறுப்புக்களாய்ப் பகுக்கப் பட்டதனாலுமே, பகம் என்னும் சொற்கு ஆறு என்னும் தொகைப்பொருள் தோன்றிற்று.

பகுதல் என்னும் சொல் மேலும் பலப்பல சொல்லாக்கங்களைக் கொண்டு செல்வதாகப் பாவாணர் காட்டியுள்ளார்.

**அரவணைத்தல்**

பாம்புகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து தழுவுந் தொழிலிற் சிறந்தவை. இதனால் முதலாவது ஒருவரையொருவர் உடலால் கட்டித் தழுவுவதையும், பின்னர் உள்ளத்தால் ஒன்றித் தழுவுவதையும் அன்பாகப் பேணிக்காத்தலையும் குறிக்க அரவணைத்தல் என்னும் வழக்கெழுந்தது. அரவு = பாம்பு; அணைத்தல் = தழுவுதல்.

**சீர்தூக்கல்** என்பது, முதலாவது துலைக்கோலில் ஒன்றை நிறுத்தலுக்குப் பெயர். சீர் = துலைத்தட்டு. தூக்கல் = நிறுத்தல். இன்று மனத்தில் ஒன்றை நிறுத்தல் போல ஆராய்ந்து பார்த்து சீர்தூக்கல் என்று பெயர்.

மனமாகிய துலைக்கோலில், மதிநுட்பமாகிய வரை அல்லது படியிட்டு, நடுநிலையாகிய நாவினால் நிறுப்பதுபோல ஆராய்தல் சீர்தூக்கல்.

தீமை - நீர்மை - புன்மை

தீயைப்போல் தீங்கு செய்யும் தன்மை தீமை என்றும், நீரைப்போல் நன்மை செய்யும் தன்மை நீர்மை என்றும், புல்லைப்போல் இழிந்தநிலை புன்மை என்றும் சொல்லப்படும்.

பள்ளி என்பது, முதலாவது படுக்கையை உணர்த்தும். சொல் 'பள்ளிக்கொள்ளுதல்', 'பள்ளிகொண்டான்', 'பள்ளியெழுச்சி' முதலிய வழக்குகளை நோக்குக.

பள்ளி என்பது, கீழிடத்தை அல்லது தாழிடத்தை உணர்த்தும் பள் என்னும் வேரினின்று பிறந்ததாகும்.

பள் +அம் = பள்ளம். பள் - படு. படுதல் - கீழே கிடத்தல்.

படுக்கையையுடைய நிலமும் அறையும் வீடும் தானியாகுபெயர் என்னும் இடனாகுபெயராய்ப் பள்ளி எனப்படும். படுக்கும் அறையைப் பள்ளியறையென்பர்.

இரப்போரும் துறவிகளும் வழிப்போக்கரும் திக்கற்றவர்களும் பள்ளி கொள்வதற்கென்று, அஃதாவது படுப்பதற்கென்று ஏற்பட்ட மடமும் பள்ளி எனப்படும்.

கல்விச் சாலைகள் பெரும்பாலும் மடங்களிலிருந்து வந்தமையால், பள்ளி என்னும் சொல் கல்விச்சாலையையுங் குறித்தது.

'பள்ளிக்கூடம்', 'பள்ளிப்பிள்ளை', பள்ளிக்கு வைத்தல் முதலியன உலக வழக்கு.

எழுத்துப்பள்ளி என்பது மலையாள (சேர) நாட்டு வழக்கு.

மடங்கள் பெரும்பாலும் கோவில்களைச் சேர்ந்திருந்தமையாலும், அங்ஙனம் சேராத மடங்களுள்ளும் கோவில் இருந்தமையாலும், கோவில் கடவுள் வீடாதலானும் பள்ளி என்னும் சொல் கோவிலையுங் குறிக்கும்.

சமண புத்தமதக் கோவில்கள் மடத்தோடு சேர்ந்திருந்தமையாலேயே, பொதுவாய்ப் பள்ளி எனப்பட்டன.

மசூதிகளும் மடம் போன்றவை என்னும் காரணத்தால் பள்ளிவாசல் எனப்படும்.

*கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்*
*குழாஅத்துப் பேதை புகல்.* (840)

என்னுங்குறட்குச், சான்றோர் அவையின்கண் பேதையாயினான் புகுதல் தூயவல்ல மிதித்த சாலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற்போலும் என்பது கருத்தாகும்.

'பள்ளி' என்னும் ஒரு சொற்குத்தரும் விளக்கத்தைக் காணும்போதே, பாவாணரின் சொல்லாய்வுத்திறம் இனிது விளங்கும்.

பாவாணர் ஒரு சொல்லுக்குத் தரும் விளக்கத்தில், சொல்லின் பல்வகைப் பொருள்கள், சொல் வளர்ந்து பெருகும் வரலாறு தெரியும். ஒவ்வொரு கால கட்டத்திலும் அச்சொல்லுக்குரிய பொருள்கள், திரிபுகள், அச்சொல்லைச் சார்ந்த இலக்கியச் சான்றுகள், விளங்கும். வெவ்வேறு மொழிகளில் அவை வழங்கும் நிலைகள், இலக்கண விளக்கம், இவற்றையெல்லாம் காணமுடிகிறது. இத்தகு சொல்லாய்வைப் பாவாணர் ஒருவரே செய்ய இயலும் என்பது தெளிவாகின்றது.

பாவாணரோடு நந்தமிழர் ஒத்துழைத்திருந்தால், இந்நேரம் தமிழ் விளக்கம் பரவியிருக்கும். தமிழ் கட்டாயம் விடுதலை பெற்றிருக்கும்.

**வழக்கற்ற சொற்கள்**

அகவை - வயது.

அக நாழிகை, உண்ணாழிகை - கர்ப்பக்கிருகம்.

அங்காடி - கடைத்தெரு.

அல்லங்காடி - மாலைக் கடைத்தெரு.

அடுத்தூண் - ஜீவனத்திற்கு விட்டநிலம்

அணிகம் - வாகனம்

A ¦ Vm -(Readiness)

அணுக்கத்தொண்டன் - Personal attendent

அரியணை (அல்) அரசு கட்டில் - சிங்காதனம்.

அறைகூவல் - சவால் விடுதல்.

அறம் - தருமம்.

ஆசிரியன் - உபாத்தியாயன்

ஆவணம் - பத்திரம்

ஆளுங்கணம் - ஆட்சிக்குழு (Managing Committee)

இசை (அல்) இன்னிசை - சங்கீதம்

இட்டேற்றம் - பொய்யாகக் குற்றம் சாட்டுகை

இதழ்குவிபா - ஓட்டியம்

இதழ்அகல்பா - நிரோட்டியம்

இரப்போன் - பிச்சைக்காரன்

இயம் - வாத்தியம்

இழப்பு - நஷ்டம்

ஊட்டகர் - ஊட்டுநர் - போஷகர்

ஊட்டுப்புரை - அன்னசத்திரம்

ஒப்புரவு - உபகாரம்

ஓலக்கம் - அரசு வீற்றிருக்கை

ஓவியம் - சித்திரம்

கருவூலம் - பொக்கிஷச் சாலை.

கலங்கரை விளக்கம் - (Light House)

குடவோலை - Ballot Paper (வாக்குச்சீட்டு)

கூலம் - தானியம்

கூற்றம் - தாலுகா. (வட்டம்)

கையடை - பாதுகாக்கும்படி ஒப்புவித்த பொருள்.

கையூட்டு - லஞ்சம்

சால்வு - திருப்தி

துய்ப்பு - அனுபவம்

திருமுழுக்கு - அபிஷேகம் - ஞானஸ்நானம்.

நாளங்காடி - பகற்கடைத்தெரு.

பலகணி - ஜன்னல்

பற்றுமுறி - ரசீது.

பாடுகிடத்தல் - வரங்கிடத்தல்

பிறங்கடை - வாரிசு

மதங்கம் - மிருதங்கம்

மீகாமன் - மாலுமி

**தொகுதிப் பெயர்**

அம்பலம் - Village Assembly

அவை - Audience

அவையம் - Jury

ஆசிடை - Association கூட்டு முயற்சி

ஆயம் - Assembly மன்றம்

இல்(அல்) இல்லம் - House வீடு

கடிகை - Village Council

கணம் - Society, host, Body,

கழகம் - Academy

களம் - Field

களரி - Institute

குழு - Faction, Committe

குழூஉ - Class

குழுமம் - Guild

குழாம் - Group

குழும்பு - Company

கும்பு - Gang

கும்பல் - Crowd

குறி - Village Council

பெருங்குறி - Village Assembly

கூளி - Multitude

கூட்டம் - Meeting - gathering

திரள் - Mass

தொழுதி - Herd, Flock

தொகுதி - Set, Aggregation

தொகை - Collection, Sum.

தெருள் - Big Crowd

பண்ணை - Farm, a bevy of Ladies.

## பாவாணர் தந்த தனித்தமிழ்ச் சொல்லக்கங்கள்

| | | |
|---|---|---|
| பண்டாரகர் | - | டாக்டர் |
| பண்டுவர் | - | மருத்துவர் |

*(பண்டுவம் தமிழரிடை வழக்கில் இருந்த சொல்)*

| | | |
|---|---|---|
| குளம்பி | - | காபி |
| கொழுந்துநீர் | - | தேநீர் |
| அணியம் | - | தயார் |
| ஏந்து | - | வசதி. |
| மொட்டான் | - | ஸ்டூல் |
| மேடை | - | மேசை |
| பழக்கூட்டு | - | புரூட் சாலிட் |
| பனிக்கூழ் | - | ஐஸ்கிரீம் |
| பொந்திகை | - | திருப்தி |
| சடுத்தம் | - | விரைவு |
| பிறப்பியம் | - | சாதகம் |
| ஐந்திறம் | - | பஞ்சாங்கம் |
| தொன்மம் | - | புராணம் |
| தோற்றரவு | - | அவதாரம் |
| அறிவன் | - | புதன் |
| காரி | - | சனி |
| செந்தணப்பு | - | ஏர்கண்டிசன் |
| தூவல் | - | பேனா |

| | | |
|---|---|---|
| பாடகர் | - | பாகவதர் |
| குமுகாயம் | - | சமுதாயம் |
| எடுப்புக்கக்கூஸ் | - | எடுப்பை |
| பிளஸ்அவுட் | - | அடிப்பை |
| இரத்தம் | - | அரத்தம் |
| பர்லாங் | - | படைச்சால் |
| புனல் | - | வைத்தூற்றி |
| மணிப்பிரவாளம் | - | மணிப்பவழம் |
| சுந்தரம் | - | அழகனார் |
| இராமச்சந்திரன் | - | அழகமதியார் |
| கருணாநிதி | - | அருட்செல்வர் |
| பசுமலைசுந்தரம் | - | ஆ மலையழகர் |
| சோமசுந்தரம் | - | மதியழகர் |
| கலியாணசுந்தரம் | - | மணவழகர் |
| கருணை | - | அருள் |
| மனோகரன் | - | மனங்கவர்ந்தார் |
| சின்னச்சாமி | - | சின்னாண்டார் |
| சந்தோஷம் | - | மகிழ்நர் |
| பெங்களூர் | - | வெங்காலுர் |
| பம்பாய் | - | வேம்பாய் |
| ஆக்ஸ்போர்டு | - | எருதந்துறை |
| கிரீன்லாண்ட் | - | பைந்தீவம் |
| பசிபிக்கடல் | - | அமைதிவாரி |

பாய்லர் தொழிற்சாலை - வேம்பா
(கொதிகலன்) தொழிற்சாலை

கிரேட்டிங் எக்ஸ்பிரஸ் -தடி வழிவரைவான்

| | | |
|---|---|---|
| தினசரி | - | நாட்சரி |
| மாதப்பத்திரிகை | - | மாதிகை |
| மிருகாண்டி (மிராண்டி) | - | விலங்காண்டி |
| பட்டதாரி | - | பட்டந்தாங்கி |
| ஓட்டு | - | நேரி |

**கிழமைப் பெயர்கள்**

| தமிழ் | சமற்கிருதம் |
|---|---|
| திங்கள் | |
| செவ்வாய் | |
| அறிவன் | புதன் |
| வியாழம் | |
| வெள்ளி | |
| காரி | சனி |

**திங்கட் பெயர்கள்**

| | | |
|---|---|---|
| சுறவம் | - | தை |
| கும்பம் | - | மாசி |
| மீனம் | - | பங்குனி |
| மேழம் | - | சித்திரை |
| விடை | - | வைகாசி |

இரட்டை - ஆனி
கடகம் - ஆடி
மடங்கல் - ஆவணி
துலை - ஐப்பசி
நளி - கார்த்திகை
சிலை - மார்கழி

*(தமிழர் வரலாறு - பக். 248)*

**தெய்வப் பெயர் மாற்றம்**

தமிழ்நாட்டில் ஏற்பட்ட வடமொழித் தொன்மங்களின் கலப்பால், வடமொழி வழிபாட்டால், நல்ல தமிழ் தெய்வப் பெயரெல்லாம் சமற்கிருதச் சொற்களாகிப் பயனற்றுப் போயின. அவற்றுக்கு நேரான தமிழ்ச் சொற்களெலாந்தந்து பாவாணர் தமிழை வாழ வைத்துள்ளார் என்றே சொல்ல வேண்டும்.

வரம் - ஈவு; ஆகமம் - தோன்றியம், சித்தாந்தம் - கொண்முடிவு, புராணம் - தொன்மம், சிலுவை - குறுக்கை, எனப் பன்னூறு சொற்களை உருவாக்கித் தந்துள்ளார் பாவாணர்.

| தமிழ் | சமற்கிருதம் |
|---|---|
| அடியார்க்கு நல்லான் | பக்தவத்சலன் (பக்தவத்சல) |
| அம்மையப்பன் | சாம்பசிவன், சாம்பமூர்த்தி |
| உடையான் | ஈசுவரன் |

| | |
|---|---|
| உலகுடையான் | சகதீசுவரன், சகதீசன் (ஜகதீச) |
| ஒருமாவன், ஒரு மாவின் கீழன் | ஏகாம்பரன் (ஏகாம்ர) |
| ஒருமாவடியான் | ஏகாம்பர நாதன் |
| கேடிலி | அட்சயன் (அக்ஷய) |
| சொக்கன் | சுந்தரன் |
| தாயுமானவன் | மாதுருபூதம் (மாத்ருபூத) |
| தான்றோன்றி | சுயம்பு (ஸ்வயம்பூ) |
| தூக்கிய திருவடி | குஞ்சிதபாதம் |
| தென்முக நம்பி | தட்சிணாமூர்த்தி (தக்ஷிணாமூர்த்தி) |
| நடவரசன் | நடராஜன் (நடராஜ) |
| புற்றிடங்கொண்டான் | வன்மீகநாதன் |
| பெருந்தேவன் | மகாதேவன் (மஹாதேவ) |
| மங்கைபங்கன் | பிருகதீசுவரன், மகேசுவரன் |
| மாதொருபாகன் | அர்த்தநாரி, அர்த்தநாரீசுவரன் |
| மணவழகன் | கலியாணசுந்தரன் |
| வழித்துணையான் | மார்க்கசகாயன் |

## இறை பெயர்கள்

அம்மை - அம்பா
அழகம்மை - அபிராமி, சுந்தராம்பா, சௌந்தராம்பிகை.
இடவி - வாமி
உடையாள் - ஈசுவரி
உலகம்மை - சகதாம்பா (ஜகதாம்பா)
உலக முழுதுடையாள் - அகிலாண்டேசுவரி.
கயற்கண்ணி - மீனாட்சி (மீனாக்ஷி)

காமக்கண்ணி - காமாட்சி (காமாக்ஷி)
தடங்கண்ணி - விசாலாட்சி (விசாலாக்ஷி)
நீலம்மை - நீலாம்பா, நீலாம்பிகை
மலைமகள் - பார்வதி

**திருமால் பெயர்கள்**

அரங்கன் - ரங்க(ன்)
அரங்கநம்பி - ரங்கநாத(ன்)
உலகநம்பி - சகநாதன் (ஜகந்நாத)
கோவலன் - கோபாலன்
பெருமால் - பெருமாள் - மகாவிஷ்ணு
விண்டு - விஷ்ணு.

**கடவுள் பெயர்கள் (பொது)**

ஆண்டவன், ஆண்டான் - சாமி (ஸ்வாமின்)
இயற்றியான் - கர்த்தா
பகவன், பகவான் - பகவான், பகவத்
பரஞ்சுடர் - பரஞ்சோதி (பரஞ்ஜோதி)

**இடப்பெயர் மாற்றம்**

அருணமலை; அண்ணாமலை - அருணாசலம்
இடைமருதூர் - மத்தியார்ச்சுனம்
கழுக்குன்றம் (கழுகுக்குன்றம்) - பட்சிதீர்த்தம்
சிற்றம்பலம் - சிதம்பரம்
திருவரங்கம் - ஸ்ரீரங்கம்
திருவானைக்கா - சம்புகேசுவரம்

நாவலந்தீவம் - சம்புத்தீவம் (ஜம்புத்வீப)
பழமலை (முதுகுன்றம்) - விருத்தாசலம்
பனிமலை - இமாலயம்
பாதிரிபுரம் - பாடலிபுரம்
புக்கொளியூர் - அவிநாசி
பொன்மலை - மேரு (பர்வதம்)
பொன்னம்பலம் - கனகசபை
மயிலாடுதுறை - மாயூரம் - மாயவரம்.
மரைக்காடு - மறைக்காடு - வேதாரணியம்
வினைதீர்த்தான் கோவில் - வைத்தீசுவரன் கோயில் (புள்ளிருக்குவேளூர்)
வெண்காடு - சுவேதவனம்
வெள்ளிமலை - கைலாசம் - கைலாயம்.

## பொதுச் சொற்கள்

| தமிழ் | - | சமற்கிருதம் |
|---|---|---|
| அக்கை | - | அக்கா |
| அடவி | - | அடவீ |
| அம் - அம்பு, ஆம் | - | அம்பு.அப் |
| அம்பலம் | - | அம்பர |
| அம்மை | - | அம்மா. அப்பா |
| அரசன் | - | ராஜன் |
| ஆணி | - | ஆணி |
| ஆம் (yes) | - | ஆம் |
| இடைகழி | - | தேஹலி |

| | | |
|---|---|---|
| உண்ணம் | - | உஷ்ணம் |
| உத்தரம் (வடக்கு) | - | உத்தர |
| உம்பர் | - | உபரி |
| உரு-உருவு | - | ரூப |
| உலகு-உலகம் | - | லோக |
| உவமை | - | உபமா |
| ஏமம்-யாமம் | - | யாம |
| கடுகு-கடுகம் | - | கடுக |
| கரணம் | - | கரண |
| கரு-கரும்-கருமம் | - | கர்மன் |
| கலுழன் | - | கருட |
| கன்னி | - | கன்யா |
| கன்னிகை | - | கன்யகா |
| காக்கை | - | காக்க |
| காயம் | - | ஆகாச |
| கால்-காலம் | - | கால |
| காளம்-கருப்பு | - | கால |
| காளி | - | காலி |
| குடும்ப - குடும்பம் | - | குடும்ப |
| குண்டம் | - | குண்ட |
| கும்பம் | - | கும்ப |
| கோ(ஆ) | - | கோ (ஓ) |
| கோபுரம் | - | கோபுர |
| சகடம் | - | சகட |
| சங்கு.சங்கம் | - | சங்க |

| | | |
|---|---|---|
| சமம் | - | சமா் |
| சமரம் | - | சமர |
| சவம் (அமை-அவை) | - | சவ |
| சவை | - | சபா |
| சுட்கு-சுக்கு | - | சுஷ்கு |
| உவண் - உவணம் | | |
| - சுவணம் | - | ஸூபர்ண |
| தக்கு-தக்கணம் | - | தக்ஷிண |
| தண்டு-தண்டம் | - | தண்ட |
| தயிர் | - | ததி |
| தாமரை | - | தாமரஸ |
| தா-தானம் | - | தான |
| திடம் | - | த்ருட |
| திரு | - | ச்ரீ-ஸ்ரீ |
| துருவு | - | த்ரு |
| துலா | - | துலா |
| தூண்-தூணம் | - | ஸ்தூணா |
| தூணி | - | த்ரோஸி |
| தூது - தூதன் | - | தூத |
| (துகள்-தூள்) | | |
| தூளி | - | தூலி |
| தோணி | - | த்ரோணி |
| நகர் - நகரம் | - | நகர |

தமிழன் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னமேயே மிகச் செம்மையான வாழ்க்கை வாழ்ந்துள்ளான். காதல், வீரம், கல்வி, கலை, பொருளியல், போர்முறை வானியல், கணியம் யாவற்றிலும் மிகச்சிறந்து விளங்கியதால், அவ்வத்துறை சார்ந்த சொற்களஞ்சியம் பன்னூறாயிரம்! பன்னூறாயிரம்! அவற்றையெல்லாம் இந்நாள் இழந்து வறியராய் உள்ளோம். அவ்வறியநிலை போக்கப் பல்லாயிரம் சொற்களைப், பழக்கத்தில் இருந்து இன்றில்லாமல் இருக்கின்ற சொற்களை அவர் நூல்களில் அள்ளி அள்ளி வைத்திருக்கும் செல்வங்கள் தமிழ்ச் செல்வங்களன்றோ!

### அவரை வகை

1. ஆரால்மீனவரை
2. ஆனைக்காதவரை
3. இருவித்தவரை
4. இறகவரை
5. கணுவவரை
6. கப்பலவரை
7. கருப்பவரை
8. குங்குமவவரை
9. கோழிக்காலவரை
10. சங்கவரை
11. சாட்டவரை
12. சிவப்பவரை
13. கருக்கவரை
14. செம்பளிஅவரை
15. நகரவரை
16. நாட்டவரை
17. பட்டையவரை
18. பாலவரை
19. மணியவரை
20. வாளவரை
21. விரலவரை

### ஆட்டின் வகை

1. காட்டாடு
2. குறும்பாடு
3. கொடியாடு
4. செம்மறியாடு
5. மலையாடு
6. வெள்ளாடு

### ஆந்தை வகை

1. கொம்பு ஆந்தை
2. கோட்டான்
3. ஊமன்
4. குடிஞை
5. குரால்
6. கூகை
7. மூங்கன்

### ஆமை வகை

1. நிலத்தாமை
2. கடலாமை
3. நன்னீர் ஆமை
4. நீராமை
5. விண்மீன் ஆமை

### ஈ வகை

1. வீட்டு ஈ
2. இறைச்சி ஈ
3. கண் ஈ
4. கள் ஈ
5. பழ ஈ
6. ஆட்டு ஈ
7. மாட்டு ஈ

### உள்ளான் குருவி வகை

1. கோரையுள்ளான்
2. கீறியுள்ளான்
3. கோழியுள்ளான்

4. காட்டு உள்ளான்
5. துடுப்பு உள்ளான்
6. மாறியுள்ளான்
7. பதுங்கையுள்ளான்
8. வாலாட்டியுள்ளான்
9. மயில் உள்ளான்.
10. மூக்கு உள்ளான்.
11. கட்டித்தலை உள்ளான்.
12. தடிமூக்கு உள்ளான்.

**ஐங்கனி வகை**

1. மாதுளை
2. கொளுஞ்சி
3. நாரத்தை
4. எலுமிச்சை
5. தாமரத்தை

*செ.சொ.பி. பேரகரமுதலி -பாவாணர்-*

**வடசொற் றமிழகரமுதலி**

| | |
|---|---|
| அங்கவஸ்திரம் | - மேலாடை |
| அசங்கியம் | - அருவருப்பு |
| அசாத்தியம் | - முடியாமை |
| அவரோகணம் | - அமரோசை |
| அற்புதம் | - மருட்கை. இறும்பூது. |
| அன்னம் - எகினம் | - ஓதிமம் |
| அனுக்கிரகம் | - அருளல் |
| அனுபவி | - நுகர்-துய்-பட்டறி |
| ஆச்சரியம் | - வியப்பு |

| | |
|---|---|
| ஆசனம் | - இருக்கை |
| உத்தரம் | - வடக்கு |
| உதரம் | - வயிறு |
| உலோகம் | - மாழை |
| உற்சவம் | - திருவிழா |
| ஒட்டியம் | - இதழ் குவிபா |
| கபாடபுரம் | - அலைவாய் |
| கர்வம் | - செருக்கு |
| கனகசபை | - பொன்னம்பலம் |
| கனிஷ்ட | - இளைய |
| காஷாயம் | - காவி |
| கிரமம் | - ஒழுங்கு |
| கைலாசம் | - வெள்ளிமலை |
| சக்கரம் | - ஆழி |
| சக்தி | - ஆற்றல் |
| சகஜம் | - வழக்கம். |
| சங்கம் | - கழகம் |
| சத்துரு | - பகைவன் |

## இசைக் குறிப்புகள்

இசை - ஓசை

இன்னிசை - சங்கீதம்

இசை உறுப்புகள் - அராகம் - தாளம்

அராகம் - அர் என்னும் ஒலிக் குறிப்பினின்றும் பிறந்து இடையைக் குறிக்கும்.

தாளம் : பாடும்போது காலத்தைத் துணிக்கும் துணிப்பு.

தாள் : கால். தாள் - தாளம்.

காலையாவது கையையாவது அசைத்தும் தட்டியும் தாளத்தைக் கணிப்பது.

தாளம் : பாணி கொட்டு

பண்ணுவது பாணி.

சுரம் : மொத்தம் ஏழு. ஏழிசை எனப்படும்.

| | தென்சொல் | வடசொல் | அடையாள எழுத்து |
|---|---|---|---|
| 1. | குரல் | ஷட்ஜமம் | ச |
| 2. | துத்தம் | ரிஷபம் | ரி |
| 3. | கைக்கிளை | காந்தாரம் | க |
| 4. | உழை | மத்திமம் | ம |
| 5. | இளி | பஞ்சமம் | ப |
| 6. | விளரி | தைவதம் | த |
| 7. | தாளம் | நிஷாதம் | நி |

ஒருநிலை - ஸ்தாய்
வலிவு - தாரம்
மெலிவு - மந்தரம்
சமன் - மத்மம்

ச.ரி.க.ம.ப.த.நி. தமிழில் ஏற்பட்ட குறிகள்.

பண் - (7 சுரம்) - சம்பூரணம்
பண்ணியம் - (6 சுரம்) - ஷாடவம்
திறம் - (5 சுரம்) - ஔடவம்

திறத்திறம் - (4 சுரம்) - சுவராந்தம்.

பண்களைத் திரிக்கும் முறையில் மிக விரிவானது பாலை. அது ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரைப்பாலை என நால்வகை.

ஆயப்பாலையினின்று,

| | |
|---|---|
| செம்பாலைப்பண் | - தீரசங்கராபரணம் |
| படுமலைப்பாலைப்பண் | - கரகரப்பிரியா |
| செவ்வழிப்பாலைப்பண் | - தோடி |
| அரும்பாலைப்பண் | - கல்யாணி |
| கோடிப்பாலைப்பண் | - அரிகாம்போதி |
| விளரிப்பாலைப்பண் | - பைரவி |
| மேற்செம்பாலைப்பண் | - சுத்ததோடி. |

என்னும் ஏழு பண்கள் பிறக்கும்.

பெரும்பண்கள் - மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை.

குலப்(சாதி)பெண்கள் - அகநிலை - புறநிலை - அருகியல் - பெருகியல்.

பிங்கலத்தில் - 103 பண்கள் கூறப்பட்டுள்ளன.
தேவாரத்தில் - 24 பண்கள் வழங்கப்பட்டுள்ளன.
ஆதி இசை - 11991. அடியார்க்கு நல்லார் உரைக்குறிப்பு.

ஆலத்தி - ஆலாபனம்
ஆரோசை - ஆரோகணம்
அமரோசை - அவரோகணம்
அலுக்கு - கமகம்

**தோற் கருவிகள்**

| | |
|---|---|
| பேரிகை | தண்ணுமை |
| படகம் | தடாரி |
| இடக்கை | அந்தரி |
| உடுக்கை | முழவு |
| மத்தளம் | சந்திரவளையம் |
| சல்லிகை | மொந்தை |
| கரடிகை | முரசு |
| திமிலை | கண்விடுதூம்பு |
| குடமுழா | நிசாளம் |
| தக்கை | துடுமை |
| கணப்பறை | சிறுபறை |
| தமருகம் | அடக்கம் |
| விரலே | தகுணிச்சம் |
| உபாங்கம் | பாகம் |
| துடி | நாழிகைப்பறை |
| | பெரும்பறை. |

**முழவு வகை**

அகமுழவு - அகப்புறமுழவு

புறமுழவு - புறப்புறமுழவு

பண்ணமைமுழவு - நாண்முழவு, காலை முழவு

**துளைக்கருவி**

குழல் - நாகசுரம்.

**நரம்புக்கருவிகள்**

| | |
|---|---|
| பேரியாழ் | - 21 நரம்புகள் |
| மகரயாழ் | - 19 நரம்புகள் |
| சகோட யாழ் | - 14 நரம்புகள் |
| செங்கோட்டியாழ் | - 7 நரம்புகள் |
| சுரையாழ் | - 1 நரம்பு |
| இயம் | - வாத்தியம் |
| இயவர் | - வாத்தியக்காரர் |
| கின்னரம் | - பிடில் |
| மத்தளம் | - மதங்கம் = மிருதங்கம். |
| இசைக்குழல் | - நாகசுரம் |
| இசைப்பெட்டி | - ஆர்மோனியம். |

*ஒப்பியன் மொழிநூல் - பக். 110-114.*

**மறுதலை வகைச் சொற்கள்**

| | | |
|---|---|---|
| Opposite | - | எதிர் |
| Alteration | - | திரித்தம் |
| Enmity | - | பகை |
| Denial | - | மறுதலிப்பு |
| Contrariety | - | மாற்றுமை (அல்) மறுதலை |

| | | |
|---|---|---|
| Refutation | - | மறுப்பு |
| Negation | - | மறை |
| Strongnegation | - | எதிர்மறை |
| Transference | - | மாற்றம் |
| Antidote | - | மாற்று |
| Exchange | - | மாறு |
| Contradiction | - | முரண் |
| Prohibition | - | விலக்கு |
| Difference | - | வேற்றுமை |
| Change | - | வேறுபாடு |

**காற்றுவகை**

| | | |
|---|---|---|
| Wind | - | வளி |
| Tempest | - | சூறாவளி |
| Whirl Wind | - | சுழல் |
| gas | - | காற்று |
| Air | - | அன்றமை |
| Spirit, Vapour | - | ஆவி |
| mist | - | வெம்பாவி |
| Steam | - | நீராவி |
| Cyclone | - | புயல் |

*சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்*
*பக். 41.45.*

# 17. பாவாணர் பெற்ற சிறப்புகள்

*1955* சேலம் தமிழ்ப்பேரவை

தந்தை பெரியார் தலைமையில், **திராவிட மொழி நூல் ஞாயிறு** என்னும் பட்டம் வழங்கியது.

*1960* தமிழ்நாட்டரசு

செப்புப்பட்டயம் ஆளுநரால் வழங்கப் பட்டது.

*9. 4. 1961* மதுரை எழுத்தாளர் மன்றம்

பொன்னாடை போர்த்தி விருந்தளித்துச் சிறப்புச் செய்தது.

*12. 1. 1964* மதுரைத் தமிழ்காப்புக்கழகம்.

**தமிழ்ப் பெருங்காவலர்** பட்டம் வழங்கியது.

*16. 10. 1966* துறையூர் விழா. (அ. முருகன்)

பொற்கிழி அளித்தது.

*8. 9. 1967* மதுரை மணிவிழாக்குழு. மணிவிழா நடத்தியது.

*27.10.1968* திருச்சிப்புத்தனாம்பட்டி.

பொற்கிழி அளித்தது. (அ. முருகன்)

மதுரைத்தமிழெழு எழுத்தாளர் மன்றம் - மொழிநூல் மூதறிஞர் எனும் பட்டம் வழங்கியது.

1970 சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம். வெள்ளித்தட்டு அளித்தது.

4,5. 5. 1971 பறம்புமலைப் பாரிவிழாவில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் செந்தமிழ் ஞாயிறு - பட்டமளித்தது

13. 7. 1974 சென்னை மாநகர மருத்துவக் கல்லூரி மாணவர்கள், கலைவாணர் அரங்கிப் பாராட்டுவிழா நடத்தினர். கலைஞர் மு. கருணாநிதி பொன்னாடை போர்த்தினார்.

15. 1. 1979 திருவள்ளுவர் திருநாளில் தமிழக அரசு ''செந்தமிழ்ச் செல்வர்'' என்னும் பட்டமளித்துச் சிறப்பித்தது. முதல்வர். ம.கோ. இராமச்சந்திரனார் வழங்கினார்.

5. 1. 1981 மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டில் 'மாந்தர் தோற்றமும் தமிழ் மரபும்' பற்றிப் பேருரையாற்றினார். பாவாணர்க்குத் தமிழ் ஞாயிறு. மொழிநூல் மூதறிஞர், மொழிநூற் பேரறிஞர் ஆகிய பட்டங்களும் உண்டு.

# 18. வாழ்க்கைச் சுவடுகள்

| *தி.பி.* | *கி.பி.* | |
|---|---|---|
| 1933 | 1902 | : திருநெல்வேலி மாவட்டம், சங்கரநயினார் கோயிலில் சுறவம் - 26ஆம் நாள் (7.2.1902) பிறந்தார். |
| தந்தை | | : ஞானமுத்து |
| தாய் | | : பரிபூரணம் |
| 1938 | 1907 | : வடார்க்காடு மாவட்டம், ஆம்பூர் மிசௌரி |
| தொடக்கக் கல்வி | | : நல்லஞ்சல் உலுத்தரின் விடையூழிய நடுநிலைப் பள்ளி. |
| உயர்நிலைக் கல்வி | | : திருநெல்வேலி மாவட்டம், பாளையங்கோட்டை, திருச்சபை விடையூழிய உயர்நிலைப் பள்ளி (9,10,11 - வகுப்பு) |
| 1950-1952 | 1919-1921 | : முகவை மாவட்டம், திருவில்லிபுத்தூர் வட்டம், சீயோன் மலையிலுள்ள சீயோன் நடுநிலைப் பள்ளியில் முதற்படிவ ஆசிரியப் பணியிற் சேர்ந்தார். |
| 1952-1953 | 1921-1922 | : வடார்க்காடு மாவட்டம், ஆம்பூர் நடுநிலைப் பள்ளியில் (தாம் பயின்ற பள்ளி) உதவி ஆசிரியராய்ப் பணியாற்றினார். |
| 1955 | 1924 | : மதிப்பு மிக்கதாகக் கருதப்பட்ட மதுரைத் தமிழ்ச் சங்கம் நடத்திய பண்டிதத் தேர்வில் வெற்றி பெற்றார். (இவ்வாண்டில் பாவாணரைத் தவிர வேறெவரும் வெற்றி பெறவில்லை.) |

| | | |
|---|---|---|
| | | கிறித்தவக் கீர்த்தனம் - நூல் வெளியீடு. உதவித் தமிழாசிரியர், சென்னை, திருவல்லிக்கேணிக் கெல்லற்று உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றினார். |
| 1956 1925 | : | தமிழாசிரியர், சென்னைக் கிறித்தவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றினார். சிறுவர் பாடல் திரட்டு நூல் வெளியீடு. |
| 1957 1926 | : | திருநெல்வேலித் தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம் நடத்திய தனித்தமிழ்ப் புலவர் தேர்வில் இவர் ஒருவரே வெற்றி பெற்றார். |
| 1959 1928 | : | தலைமைத் தமிழாசிரியர், மன்னார்குடி பின்லே கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றினார். முதல் மனைவி எசுத்தர் அம்மையார் மறைவு. |
| 1961 1930 | : | நேசமணி அம்மையாரை மணந்தார். |
| 1964 1934 | : | தலைமைத் தமிழாசிரியர், பிசப்பு ஈபர் உயர்நிலைப் பள்ளி, புத்தூர், திருச்சி. |
| 1968 1937 | : | முதல் இந்தி எதிர்ப்புப் போரை மையமாகக் கொண்டு - செந்தமிழ்க்காஞ்சி நூல் வெளியீடு. இந்தி எதிர்ப்புக் கிழமை கொண்டாடினார். கட்டுரைக்கசடறைஎன்னும் வியாச விளக்கம் நூல் வெளியீடு. |
| 1971 1940 | : | ஒப்பியன் மொழிநூல் முதற்பாகம் இயற்றமிழ் இலக்கணம் ஆகிய நூல்கள் வெளியீடு. கட்டுரை வரைவியல் என்னும் உரைநடை இலக்கண நூல் வெளியீடு. |
| 1972 1941 | : | தமிழர் சரித்திரச் சுருக்கம் வெளியீடு : தமிழக இளைஞர் மன்றம், திருச்சி. தமிழன் எப்படிக் கெட்டான் ஆகிய நூல்கள் வெளியிடல். |

1973 1942 : தலைமைத் தமிழாசிரியர், சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப் பள்ளி.
கீழைக்கலைத் (B.O.L) தேர்வில் வெற்றி பெற்றார்.

1974 1943 : சுட்டு விளக்கம் - நூல் வெளியீடு. பண்டிதமணி கதிரேசனார் தலைமையில் நடைபெற்ற முதலாம் தமிழ் உணர்ச்சி மாநாட்டில் உரை.

1975 1944 : சென்னைப் பல்கலைக்கழகத்தில் கலைமுதுவர் (எம்.ஏ.) பட்டம் பெற்றார். தமிழ்த்துறைத் தலைவராகச் சேலம் நகராண்மைக் கல்லூரியில் பணியாற்றினார். திரவிடத்தாய் - நூல் வெளியீடு.

1980 1949 : சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் - நூல் வெளியீடு பாவாணர்க்குத் தவத்திரு மறைமலையடிகளார் சான்றிதழ் வழங்கிச் சிறப்பித்தார்.
பெருஞ்சித்திரனார் பாவாணரின் தலைமாணாக்கராகச் சேலம் கல்லூரியில் பயின்றார்.

1981 1950 : உயர்தரக் கட்டுரை இலக்கணம் (மு.பா.) - நூல் வெளியீடு.

1982 1951 : உயர்தரக்கட்டுரை இலக்கணம் (இ.பா.) - நூல் வெளியீடு.

1983 1952 : பழந்தமிழாட்சி - நூல் வெளியீடு.

1984 1953 : முதற்றாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம் - நூல் வெளியீடு.

1985 1954 : தமிழ்நாட்டு விளையாட்டுகள் - நூல் வெளியீடு

1986 1955 : பெரியார் ஈ.வே.ரா. தலைமையில் நடைபெற்ற சேலம் தமிழ்ப்பேரவை இவரின் தொண்டைப் பாராட்டித் **திராவிட மொழிநூல் ஞாயிறு** எனும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. A Critical Survey of Madras University Lexicon என்னும் ஆங்கில நூல் வெளியிடப் பெற்றது.

1987 1956 : தமிழர் திருமணம் - நூல் வெளியீடு அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணியிற் சேர்ந்தார்.

1988 1957 : திசம்பர் 27, 28, 29இல் தில்லியில் நடைபெற்ற அனைத்திந்தியக் கீழைக்கலை மாநாட்டில் பங்கேற்றார்.

1990 1959 : மொழிஞாயிறு பாவாணர் அவர்களால் பெயர் சூட்டப்பட்ட *தென்மொழி* இதழ் பாவலரேறு பெருஞ்சித்திரனாரால் தொடங்கப் பெற்றது. தனித்தமிழியக்க வளர்ச்சிக்கு இவ்விதழ் இன்றளவும் பெரும் பங்காற்றி வருகிறது.

1991 1960 : தமிழ்நாட்டு அரசின் ஆட்சித்துறையில் கலைச் சொல்லாக்கத் தொகுப்பில் பங்கேற்றுச் சிறப்பித்தமைக்காகத் தமிழ்நாட்டரசு சார்பில் ஆளுநரால் அவருக்குச் செப்புப் பட்யம் வழங்கப்பட்டது.

1992 1961 : சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதியின் சீர்கேடு - நூல் வெளியீடு. அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் ஏற்பட்ட சிக்கலால் எனக்கு வறுமையும் உண்டு, மனைவியும், மக்களும் உண்டு - அதோடு எனக்கு மானமும் உண்டு - என்று கூறிவிட்டுப் பல்கலைக்கழகப் பணியிலிருந்து வெளியேறினார். என்னோடு தமிழும் வெளியேறியது என்று கூறினார்.

1994 1963 : துணைவியார் நேசமணி அம்மையார் மறைவு.

1995 1964 : முனைவர் சி. இலக்குவனார் தலைமையிலான மதுரைத் தமிழ்க் காப்புக் கழகம் - தமிழ்ப் பெருங்காவலர் என்னும் பட்டம் வழங்கியது.

என் அண்ணாமலைநகர் வாழ்க்கை என்னும் கட்டுரைத் தொடர் தென்மொழியில் வெளிவந்தது.

1997 1966 : இசைத்தமிழ்க் கலம்பகம்
பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்
The Primary Classical Language of the World
என்னும் நூல்கள் வெளியீடு.

1998 1967 : தமிழ் வரலாறு, வடமொழி வரலாறு
The Language Problem of Tamilnadu and its Logical solution ஆகிய நூல்கள் வெளியீடு.

1999 1968 : மதுரைத் தமிழ் எழுத்தாளர் மன்றம் இவரின் மணிவிழாவைக் கொண்டாடி **மொழிநூல் மூதறிஞர்** எனும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. 6.10.1968இல் இவரைத் தலைவராகக் கொண்டு உலகத் தமிழ்க் கழகம் தோன்றியது.
இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்?
வண்ணனை மொழிநூலின் வழுவியல்- Is Hindi the logical solution of India ஆகிய நூல்கள் வெளியீடு.

2000 1969 : பறம்புக்குடியில் உலகத் தமிழ்க் கழக முதல் மாநாடு. இம் மாநாட்டில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் முனைவர் சி. இலக்குவனார், முனைவர் வ. சுபமாணிக்கனார், புலவர் குழந்தை உள்ளிட்ட தமிழ்ச் சான்றோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.
இம்மாநாட்டில் - திருக்குறள் தமிழ் மரபுரை;
இசையரங்கு இன்னிசைக் கோவை
தமிழ் கடன் கொண்டு தழைக்குமா? - ஆகிய நூல்கள் வெளியீடு.

2002 1971 : பறம்புமலையில் குன்றக்குடி அடிகளார் தலைமையில், பாரி விழாவில் **'செந்தமிழ் ஞாயிறு'** என்று பாராட்டிச் சிறப்பிக்கப் பெற்றார்.

பாவலரேறு பெருஞ்சித்திரனார் அவர்களால் தென்மொழியில் அறிவிக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்டம் வகுக்கப் பெற்றது. இத்திட்டத்தைப் பின்னர்த் தமிழக அரசே ஏற்று 1974ஆம் ஆண்டில் தனி இயக்ககமாக உருவாக்கியது.

2003 1972 : தஞ்சையில் இவர் தலைமையில் உலகத் தமிழ்க்கழக மாநாடு - தமிழன் பிறந்தகத் தீர்மானிப்பு மாநாடாக நடந்தது.
- தமிழர் வரலாறு, தமிழர் மதம் ஆகிய நூல்கள் வெளியீடு.

2004 1973 : வேர்ச்சொற் கட்டுரைகள் நூல் வெளியீடு.

2005 1974 : 8.5.1974இல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குநராகத் தமிழ்நாட்டரசால் அன்றைய முதல்வர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களால் அமர்த்தப்பட்டார். செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் பேரகர முதலியின் முதல் மடல முதற் பகுதி அவரின் மறைவிற்குப் பிறகு 1985இல் வெளியிடப்பட்டது.

2009 1978) : மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடைமை - நூல் வெளியீடு

2010 1979 : தமிழ் இலக்கிய வரலாறு - நூல் வெளியீடு. தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்களால் செந்தமிழ்ச் செல்வர் என்னும் சீரிய விருது வழங்கப்பட்டது. சென்னையில் உலகத் தமிழ்க் கழக நான்காவது மாநாடு பாவாணர் முன்னிலையில் நடைபெற்றது. மாநாட்டிற்குப் பதிப்பாசிரியர் புலவர் அ. நக்கீரனார் தலைமை தாங்கினார்.

2011 1980 : Lemurian Language and its Ramifications An Epitome எனும் ஆங்கில நூல் மதுரையில் நடைபெறவிருந்த ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு அயல்நாட்டு பேராளர்களுக்காக (52 பக்க அளவில்) உருவாக்கப்பட்டது.

2012 1981 : மதுரையில் ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டில் பங்கேற்று மாந்தன் தோற்றமும், தமிழர் மரபும், என்னும் தலைப்பில் தமிழர்தம் வரலாற்றுப் பெருமையை நிலைநாட்டிப் பேசினார்.
சுறவம் 2 ஆம் நாள் சனவரி 15, இரவு 12.30க்கு இவ்வுலக வாழ்விலிருந்து மறைந்தார்.

*நன்றி :* **பாவாணர் நூல்கள் வெளியீட்டாளர்,**
*தமிழ்மண் பதிப்பகம், சென்னை - 600 014.*



## பாவாணர் நூல்கள்

1. திருக்குறள் தமிழ் மரபுரை
2. தமிழ் வரலாறு
3. தமிழர் வரலாறு
4. வடமொழி வரலாறு
5. தமிழர் மதம்
6. ஒப்பியன் மொழிநூல்
7. முதற்றாய் மொழி
8. மண்ணில் விண் (அ) வள்ளுவர் கூட்டுடைமை
9. வண்ணனை மொழிநூலின் வழுவியல்
10. தமிழிலக்கிய வரலாறு
11. பழந்தமிழாட்சி
12. தமிழர் திருமணம்
13. வேர்ச் சொற் கட்டுரைகள்
14. கட்டுரை வரைவியல்
15. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்
16. தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்
17. சென்னைப் பல்கலைக்கழக அகர முதலியின் சீர்கேடு

18. செந்தமிழ்க்காஞ்சி
19. தமிழ் கடன்கொண்டு தழைக்குமா?
20. இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்?
21. பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்
22. திரவிடத்தாய்
23. இயற்றமிழ் இலக்கணம்
24. சுட்டு விளக்கம்
25. உயர்தரக் கட்டுரை இலக்கணம் I, II
26. இசைத்தமிழ்க் கலபகம்
27. இசையரங்கு இன்னிசைக்கோவை
28. The Primary Classical Language of the World
29. The Language Problem of Tamil Nadu and Its logical Solution.
30. Is Hindi the logical solution of India.
31. தமிழர் சரித்திரச் சுருக்கம்
32. தமிழன் எப்படிக் கெட்டான்?
33. சிறுவர் பாடல் திரட்டு
34. கிறித்துவக் கீர்த்தனம்
35. என் அண்ணாமலை நகர் வாழ்க்கை

## நூலாக்கத்திற்குப் பயன்பட்ட நூல்கள்

பாவாணர் பெருமை - க. தமிழ்மல்லன். க.மு.க.இ.
பாவாணர் சிறப்பு - க. தமிழ்மல்லன் க.மு.க.இ.
செந்தமிழ் ஞாயிறு - ஞா. தேவநேயம்
தொகுப்பு - மு. அறவாழி
பொறி. உ. சா.
பாவாணர் - இரா. இளங்குமரன்.
பாவாணர் கடிதங்கள் - இரா. இளங்குமரன்
முதல்தாய் மொழி அல்லது
தமிழாக்க விளக்கம் - பாவாணர்
வேர்ச்சொற்கட்டுரைகள் - பாவாணர்.
வடமொழி வரலாறு - பாவாணர்
ஒப்பியன் மொழிநூல் - பாவாணர்
இசைத்தமிழ்க் கலம்பகம் - பாவாணர்.
தனிப்பாடற்றிரட்டு
தென்மொழி - பாவலரேறு பெருஞ்சித்திரனார்
தமிழ்ச் சொற்பிறப்பியல்
வளர்ச்சி வரலாறு - துரை. குணசேகரன்
செ.சொ.பி. அகரமுதலிகள்
திராவிடமொழிகளில்
ஒப்பிலக்கணம் - கால்டுவெல்
திரவிடத்தாய் - பாவாணர்
கனிச்சாறு - பெருஞ்சித்திரனார்
பழந்தமிழாட்சி - பாவாணர்
மண்ணில்விண் அல்லது
வள்ளுவர் கூட்டுடைமை - பாவாணர்.
தமிழர் மதம் - பாவாணர்

# நூலாசிரியர்
# இலக்கியன் படைப்புகள்

## பாவியல்



தமிழ் மகள்
எழுக தமிழினமே!
பாடுக குயிலே!
தமிழ் விடுதலை!
இனிய உலகம்
(புதுவை அரசின் கம்பன் புகழ்ப்பரிசு பெற்றது)
பாவேந்தர் பாதை
பாட்டுப் பனுவல்
தமிழ் முரசம்
தமிழ்க்களம்
இளையோர் பாடல் (சிறார் பா)
பாடி மகிழ்ந்திடு (சிறார் பா)

## உரை

செந்தமிழ் ஞாயிறு திரு.வி.க.
பாவேந்தர் குயில் ஓர் ஆய்வு
பாவேந்தரும் இதழியிலும்
கவித்தென்றல் கல்லாடன்
தமிழ்ஒளியின் புரட்சிக்குரல்
வாணிதாசன் பாடல்களில் உவமைநலம்
தமிழ்ப்புனல்
புதுமைப் பாவலர் வாணிதாசன்

